to the general good. A fair and faithful report of the whole debate would, therefore, not be actionable. A garbled or partial report or detached parts of proceedings published with intent to injure individuals will be disentitled to protection.

The Press should not cast any reflections on the conduct and character of the Members in the performance of their duty. The Press should not also attribute motives and malice to the Members.

It would be of interest if I quote from the Committee of Privileges of the House of Commons relating to the "Daily Mail" newspaper in 1948 : 9-30 a.m.

"Whilst recognizing that it is the duty of Parliament to intervene in the case of attacks which may tend to undermine public confidence in and support of the institution of Parliament itself, your Committee think it important that, on the one hand the law of Parliamentary privilege should not be administered in a way which would fetter or discourage the free expression of opinion or criticism however prejudiced or exaggerated such opinions or criticisms might be, and that, on the other hand, the process of Parliamentary investigation should not be used in a way which would give importance to irresponsible statement."

The objection taken is to the use of the word "திமிர்" which would mean 'haughty' or 'arrogant'. Calling a speech of a Member haughty may not amount to attributing improper motives to the Member. The word is a bit strong but does not involve a matter of privilege.

The other words objected to are 'confusion' and 'noise'. These are not objectionable words at all.

Therefore I withhold my consent to raise this matter.

## III.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1961-62 (con).

### DEMAND XXIX—CIVIL WORKS—GRANTS-IN-AID.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Mr. Deputy Speaker, Sir . . .

SRI A. GOVINDASWAMY : On a point of information, Sir . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : Not after the Chair has called the Hon. the Minister.

(Sri A. Govindaswamy resumed his seat.)

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,40,25,100, under Demand XXIX—Civil Works—Grants-in-Aid."

[25th March 1961

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,40,25,100, under Demand XXIX—Civil Works—(grants-in-Aid."

SRI N. MARUDACHALAM : Sir, I move my cut-motion—

"That the allotment of Rs. 2,40,25,100 under Demand XXIX—Civil Works—Grants-in-Aid be reduced by Rs. 100."

DEPUTY SPEAKER : Cut-motion moved—

"That the allotment of Rs. 2,40,25,100 under Demand XXIX—Civil Works—Grants-in-Aid be reduced by Rs. 100."

The motion as well as the cut-motion are before the House for discussion.

Two hours have been allotted for this Demand. May I know how much time will the Hon. the Minister take for the reply?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Fifteen minutes, Sir.

SRI N. MARUDACHALAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஸ்தலஸ்தாபன கோரிக்கையின் மீது இன்றைக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் வெட்டு பிரேரணைமீது பேச விரும்புகிறேன். அதாவது இன்றைக்கு இரண்டு கோடி, கிட்டத்தட்ட 70 லட்சம் இந்த மான்யத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது சம்மந்தப்பட்டவரை, நகரசபைகளில் குறைபாடுகள் இருக்கின்றன என்பதைத் தெளிவுபடக்கூற விரும்புகிறேன். இன்றைக்கு சென்னை மாநிலத்தில் 64 நகரசபைகள் இருக்கின்றன. ஒவ்வொரு நகர சபையிலும் இருக்கும் நகர சுத்தித் தொழிலாளிகளை எடுத்துக்கொண்டால், ஒரு நகரத்தை சுகாதார விதிப்படி வைக்க, நோய் நொடி இல்லாமல், கொசுக்கடி இல்லாமல் வைக்க, பணக்காரர்களும் சாதாரண ஏழைகளும்கூட சுகாதார முறையிலே வாழ இந்த நகரசுத்தித் தொழிலாளிகள் மிகவும் முக்கியமானவர்கள். ஆனால், இன்றைக்கு ஒரு நகரசுத்தி வேலைக்கு 500 தொழிலாளர்கள் தேவைப்பட்டால், 300 அல்லது 200 தொழிலாளிகள் தான் வைக்கப்பட்டிருக்கிறார்கள், அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். அப்படிக் குறைவான தொழிலாளர்களை வைத்துக்கொண்டு ஒரு நகரத்தில் எப்படி நோய் நொடி இல்லாமல் இவர்கள் பாதுகாக்க முடியும்? உதாரணமாக கோவை நகரத்தை எடுத்துக்கொண்டால், இன்றைக்கு அங்கே 1,000 தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அவர்களில் 900 பேர்கள் பர்மனெண்ட். அவர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதில், 225 வீடுகள்தான் கட்டிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பாக்கிப் பேர்களுக்கு வீடே கிடையாது. இதன் காரணத்தால் அவர்கள் நகரத்தின் ஓரங்களிலும், மந்தைகளிலும், புறம்போக்கு நிலங்களிலும் குடியிருக்கிறார்கள். அப்படி இருப்பவர்களையும் திடீர் திடீர் என்று கிளப்பிவிடும் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. இப்படியிருந்தால் அவர்கள் எப்படி நகரத்தில் வேலையைக் கவனிக்க முடியும்? ஆகவே, பர்மனெண்ட் ஆக உள்ளவர்கள் அத்தனைபேர்களுக்கும் வீடுகள் 'கட்டிக் கொடுக்க

25th March 1961] [Sri N. Marudachalam]

வேண்டும்; அப்பொழுதுதான் அவர்கள் சுகமாக வாழ்ந்து கொண்டு, நகரத்திலும் சுகாதாரமும் நிலவ உழைக்க முடியும். ஒரு நகரம் எவ்வளவு விரிவடைந்தாலும், அவர்கள் எண்ணிக்கை அதிகப்படுவதில்லை. இன்றைக்கு கோவை நகரம் விரிந்து கொண்டே இருக்கிறது. அங்குள்ள ஹெல்த் ஆபீசர் உதவி கேட்கிறார்கள். 100 தொழிலாளர்கள் வேண்டும் என்று கேட்கப் பட்டது. ஆனால், சர்க்காரிலிருந்து அனுமதி கொடுக்கப்பட்டிருப் பது 20 தொழிலாளர்களுக்கு. அவ்வளவு பெரிய நகரத்திற்கு 100 தொழிலாளிகளுக்குப் பதிலாக 20 தொழிலாளிகள் கொடுத்தால் வேலை எப்படி நடைபெறும்? ஆகவே அவர்கள் வேலை செய்ய முடியவில்லை. சுகாதாரத்திற்குக் குந்தகம் ஏற்படுகிறது. நகர சபையானாலும் சரி, பஞ்சாயத்தானாலும் சரி, எவ்வளவு தேவைப் படுகிறதோ அவ்வளவு தொழிலாளர்களைக் கொடுத்தால்தான், நகரசுத்தி வேலை தடைப்படாமல் நடைபெறும்.

சாதாரண மேஜர், மைனர் பஞ்சாயத்துக்களில் இந்தத் தொழிலாளிகளுக்கு வீட்டு வசதி கிடையாது. பெரிய நகரசபை களும் 200, 300 வீடுகள்தான் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். மற்றவர்கள் அத்தனைபேரும் புறம்போக்கில்தான் குடியிருக்கிறார் கள். மணியக்காரரும், கணக்கப்பிள்ளையும் அவர்களைக் கிளப்பி விடுகிறார்கள். அதைக் கேட்பார்கள் இல்லை. ஆகவே, உடனடி யாக அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய சம்பளம் இன்றைக்கு ரூ. 52 அல்லது 55 தான். பஞ்சப்படி ஐந்து ரூபாய். முதலில் கொடுத்தது ரூ. 18. வீட்டு அலவன்ஸ் ரூ. 3 தான். சாதாரணமாக எங்கே மூன்று ரூபாய் வாடகையில் வீடு கிடைக்கும். ஆகவே இந்த வீட்டு அலவன்ஸ் ரூ .7-ஆக மாற்றிக் கொடுக்க வேண்டும். இது சம்பந்தமாக நகரசபையார் கூட்டத்தில் தீர்மானம் போட்டு சர்க்காருக்கு அனுப்பியிருக்கிறார்கள். அதைச் சர்க்கார் கவனிக்க வேண்டும். உடனடியாக அவர்களுக்கு வீட்டு அலவன்ஸ் ஏழு ரூபாயாக உயர்த்திக் கொடுக்க வேண்டும். அதோடு கூட அவர் களுக்கு அசுத்த அலவன்ஸ் என்று கொடுக்கப்படவேண்டும். அது சம்பந்தமாக சர்க்கார் கவனித்து, அவர்களுக்கு அசுத்த அல வன்ஸ் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் அவர்களுக்குக் கல்வி வசதியே ரொம்பக் குறைவாக இருக்கிறது. குப்பத்தில் இருப்பவர்களுக்கு, அவர்கள் குழந்தை களுக்கு நல்ல முறையில் கல்வி கற்றுக்கொடுக்க வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். மேலும் உத்தியோகங்கள் கொடுப்பதில், கீழ் மட்டத்தில் இருப்பவர்களை உயர்த்த வழிவகை செய்ய வேண்டும்.

சுகாதாரத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று எல்லா நகரங் களிலுமே எவ்வளவோ, நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. ஆனால், அந்த சுகாதாரத்தைக் காப்பாற்றக்கூடிய தொழிலாளர் களுக்கே சுகாதாரம் கிடையாது என்றால், அவர்கள் எப்படி நகர சுகாதாரத்தைப்பற்றிக் கவலைகொள்ள முடியும், அதைக் காப் பாற்ற முடியும் என்று தெரியவில்லை. ஆகவே, தொழிலாளர்களைப்

[Sri N. Marudachalam] [25th March 1961

பாதுகாத்தால்தான், சுகாதாரம் காப்பாற்றப்படும். இதை உணர்ந்து சர்க்கார் செயல்படவேண்டும் என்று கேட்டுக் கொள்ளு கிறேன்.

இந்தக் கோவை நகரத்தில் குடி தண்ணீர் பிரச்சினை மிக முக்கியமான பிரச்சினை. சட்ட மன்றத்திலே ஆரம்பத்திலேயிருந்து சொல்லிவந்திருக்கிறேன். அதோடு இப்போது பீளமேடு பஞ்சாயத்தையும் நகரசபையோடு சேர்த்துக் கொள்ளவேண்டுமென்று தாக்கீது விட்டிருக்கிறார்கள். இன்று நகரத்தில் உள்ள ஜனங்களுக்கே தண்ணீர் கொடுக்க முடியாமல் இருக்கும்போது அந்தப் பஞ்சாயத்தையும் சேர்த்தால் எப்படித் தண்ணீர் கொடுக்க முடியும். ஆகவே உடனடியாக திருவாணி அணைக்கட்டைக் கட்டி குடிதண்ணீர் வசதிக்கு நிரந்தரமான பாதுகாப்பு அளித்தாக வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு இன்னொன்று. இந்த அணைக்கட்டு கேரளா பார்டரில் இருக்கிறது. ஆகவே இத்திட்டம் சம்பந்தமாக உடனடியாக கேரள அரசாங்கத்துடன் சுமுகமாக பேச்சுவார்த்தைகள் நடத்தி இத்திட்டத்தை வெற்றிகரமாக நடத்திக்கொடுக்க வேண்டுமென்று இச்சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு நகரசபைகளின் பொறுப்பில் இருந்த மின்சார லவுட் ஸ்பீக்கர் போன்றவைகள் எல்லாம் மின்சார போர்டுக்கு மாற்றப் பட்டிருக்கிறது. இனி லவுட் ஸ்பீக்கர் இருக்கக்கூடாது, எடுத்து விடவேண்டுமென்று மின்சார இலாகா அதிகாரிக்கு சர்க்காரால் உத்தரவிடப்பட்டிருக்கிறது. லவுட் ஸ்பீக்கர் இருந்த காரணத்தினால் எவ்வளவோ சௌகரியங்கள் ஜனங்களுக்கு இருந்தன. அவ்வப்போது சமாசாரங்களைத் தெரிந்துகொள்வதற்கு நல்ல வாய்ப்பு இருந்தது. மறுபடியும் அந்த உத்தரவை மாற்றி லவுட் ஸ்பீக்கர் வைத்துக்கொள்வதற்கு அனுமதி அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு அதிகப்படியான தொகை கொடுத்தாகவேண்டும். சுகாதார மானியம், கல்வி மானியம், ரோடு மானியம் இவற்றுக்கு அந்த அந்த நகரசபைகளுக்கு எவ்வளவு தேவையோ அவற்றைக் கொடுத்து உதவியாக வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

* **SRIMATHI A. S. PONNAMMAL:** கனம் உதவித் தலைவர் அவர்களே, ஸ்தல ஸ்தாபன மந்திரியால் கொண்டுவரப்பட்ட இந்த மானியக் கோரிக்கையை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் கூறிக்கொள்ள விரும்புகிறேன். நான் முதலில் ரோடுகளுக்காக அதிகமான பணத்தை ஒதுக்கியிருப்பதைப் பார்த்து வரவேற்கிறேன். அதோடு கிராமப் புறங்களில் நல்ல ரோடு அபிவிருத்தி அடைந்திருப்பதற்கு உதாரணமாக ஒரு அமெரிக்கப் பத்திரிகையில் எழுதப்பட்டிருக்கிறது. இன்னும் இருபது ஆண்டுகள் செல்லுமேயானால் இந்தப் பகுதிகளில் எல்லாம் ஜனங்கள் இருப்பதற்கே இடம் இல்லாமல் போய்விடும், காரணம் எங்கே பார்த்தாலும் ரோடுமயமாக போடப்பட்டு வருகிறது என்று ஒரு அமெரிக்க நிபுணர் எழுதியிருக்கிறார். இப்படி ஒவ்வொரு

கிராமத்திற்கும் ரோடு வசதி செய்துகொடுக்கப்பட்டு அதனுல் போக்குவரத்து வசதி துரிதமாக முன்னேறிக் கொண்டிருப்பதைப் பார்த்து நான் பாராட்டுகிறேன். அதே போன்று சிறுசிறு கிராம ரோடுகள், பஞ்சாயத்து ரோடுகள் முதலியவற்றின் வேலைகளைச் செய்வதற்கு எல்லாம் பாதிப் பணம் கிராம பஞ்சாயத்தும், கிராம ஜனங்களும் கொடுக்கவேண்டுமென்று இருந்த நிபந்தனையை மாற்றி வரப்போகும் ஆண்டுகளில் இருந்து ஏ, பி, ஸி, டி என்று ரோடுகள் பிரிக்கப்பட்டு, எங்கெங்கு மிகவும் பிற்போக்கான பகுதியாக இருக்கிறதோ அங்கெல்லாம் 'டி' பகுதி என்று வைத்து உடனடியாகப் பல வேலைகளை மேற்கொள்வதற்கு வழி செய்திருப்பதை யாரும் பாராட்டாமல் இருக்க முடியாது. ஆனுல் இப்படி எந்த எந்த ரோடுகளை முதலில் எடுத்துக் கொள்ள வேண்டும், எந்தெந்த ரோடுகளை மராமத்து செய்தாகவேண்டும், எங்கெங்கே புதிதாக ரோடுகள் போட்டாக வேண்டும் என்பதைக் கலெக்டர் தீர்மானிக்கும்போது அந்த அந்தப் பிரதேச எம்.எல்.ஏக் களின் ஆலோசனைகளையும் கலந்தாகவேண்டும் என்று உத்தரவு போடவேண்டும். எங்கே நாங்கள் மாவட்டங்களுக்குப் போவதற்கு முன் அதைப்பற்றி கலெக்டர் முடிவு செய்துவிடுவார்களோ என்று நாங்கள் அஞ்சுகிருேம். ஆகவே உடனடியாக அவர்களுக்கு உத்தரவு போட்டாகவேண்டும். சட்டசபை அங்கத்தினர்களையும் வைத்துக் கலந்துகொண்டு இதுபற்றி அவர் சிபார்சு செய்ய வேண்டும் என்பதாகத் தீர்மானித்தால் மிகவும் நன்ருக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அதேபோன்று ரோடுகள் புதிதாகப் போட ஆரம்பிக்கும்போது நில ஆர்ஜிதம் செய்யும் வேலை மிகவும் காலதாமதம் ஆகிறது. உதாரணத்திற்குச் சொல்ல வேண்டுமானுல் எங்கள் சொந்த ஊரில் நான் படித்துக்கொண்டிருந்தபோதே டாக்டர் சௌந்தரம் ராமச் சந்திரன் அவர்கள் கம்யூனிடி டெவெலெப்மெண்டு ஒர்க்கில் ஒரு ரோடு போடுவதற்கு ஏற்பாடு செய்தார்கள். அவ்வேலை 1948-ல் தொடங்கப்பட்டது. இப்போதுதான் நில ஆர்ஜித வேலை முடிந்து ரோடும் சாங்ஷன் ஆகி இருக்கிறது. இம்மாதிரி தாமதம் ஏற் படாமல் இருக்க வேண்டும். வாடிபட்டி யூனியன் தென்கரைப் புத்தூரும், முத்துலிங்கபுரமும் கனம் மராமத்து அமைச்சர் அவர் களுக்கு நன்ருகத் தெரியும். இங்கெல்லாம் இன்னும் வேலை பூர்த்தியாகவில்லை. முத்துலிங்கபுரம் பற்றி நான்கைந்து ஆண்டுகளாகவே சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். அதிகாரிகள் வந்து பார்த்துவிட்டுப் போகிருர்களே தவிர இன்னும் ரோடு போடவில்லை. இதை ஏன் —கூறுகிறேன் என்ருல் திவிபத்து ஏற்பட்டுவிட்டால் வெளியே தப்பக்கூட அவ்வூரில் இருந்து வரமுடியாது. ஆகவே இந்தமாதிரியான இடங் களுக்கு ரோடு வசதி செய்து கொடுக்க நில ஆர்ஜிதம் செய்யும் போது—ரோடுக்காஞலும் சரி, விட்டு மனைக்காஞலும் சரி பஞ்சாயத்து மெம்பர்கள், தலைவர்கள், அதிகாரிகள், லாண்டு அக்வி ஸிஷன் தாசில்தார் இவர்கள் எல்லோரும் கலந்து ஒரு காரியத் தைச் சேர்ந்து செய்தால்தான் சீக்கிரமாக அக்காரியம் நடை பெறும். இதை கனம் அமைச்சர் அவர்கள் உணர்ந்து தக்க நட வடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[Srimathi A. S. Ponnammal] [25th March 1961

அதேபோல கம்மாய் மராமத்து எடுத்து செய்துகொண்டிருக்கிறோம். சென்ற தடவைகூட அதைப்பற்றி சொல்லியிருக்கிறேன். பி.டபிள்.யு.டி., புட் ப்ரொடக்ஷன் ஆகிய இரண்டு வேலைகளையும் ரிப்பேர் வேலையை மட்டும் பஞ்சாயத்து யூனியன் பார்த்து செய்தால் சீக்கிரம் அந்த வேலையும் விரைவில் நடைபெற ஏதுவாய் இருக்கும்.

மேலும் வெள்ளத்தில் இருந்து எங்கெங்கே கிராமங்களையும், கிராம ஜனங்களையும் காப்பாற்றவேண்டியது அவசியமாக இருக்கிறதோ அங்கெல்லாம் உடனடியாக தடுப்பு அணைகள் கட்டுவதற்கும், மதகுகள் போடுவதற்கும் நடவடிக்கை எடுத்துக்கொண்டாக வேண்டும். நடகோட்டை, சோளவந்தான் முதலிய இடங்கள் வைகையில் வெள்ளம் வந்தபோது பெரும் அளவு பாதிக்கப்பட்டு விட்டன. கிட்டத்தட்ட 238 வீடுகளுக்கு மேல் அடித்துக்கொண்டு போகப்பட்டுவிட்டது. அதேபோல நடக்கோட்டையில் இருந்து வரவேண்டுமானால் இந்த ஆற்றைக் கடப்பதற்கு முடியாமல் 20 மைல் சுற்றி வரவேண்டியிருக்கிறது. இம்மாதிரி இடங்களில் உடனடியாக மதகுகள் கட்டப்படுவதோடு, வெள்ளத்தில் இருந்து பாதுகாப்பு அளிப்பதற்கு தடுப்பு அணைகள் கட்டப்பட்டாக வேண்டும். முக்கியமாக கரையைத் தாண்டுவதற்கு மதகு போட்டு விட்டால் நன்றாக இருக்குமென்று கருதுகிறேன்.

அடுத்தபடியாக சேரி ஒழிப்புத் திட்டம். அதற்காக மத்திய சர்க்கார் 37 சத விகிதம் இனமாகவும், 37 சத விகிதம் கடனாகவும் கொடுக்கிறது. பாக்கி 25 சத விகிதம் மாநில சர்க்கார் கொடுக்கிறது. சென்னை நகரத்திற்கு மட்டும் அநேக லட்சக்கணக்கான ரூபாய்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றைக் கொண்டு வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டியதிருக்க 238 வீடுகள்தான் கட்டிக்கொடுக்கப் பட்டிருக்கின்றன என்பதைப் பார்க்கும்போது சென்னை நகராண்மைக் கழகம் இவ்விஷயத்தில் இவ்வளவு அசிரத்தையாக இருக்கிறது என்று வருந்தவேண்டியதாக இருக்கிறது. ஹரிஜனங்களைப்பற்றிப் பேசுகின்ற அவர்கள், ஹரிஜனங்களுக்காக பாடுபடுவதாகப் பேசிக்கொள்கின்ற அவர்கள், ஹரிஜனங்களுடைய நன்மைக்காக அரசாங்கம் பணம் கொடுத்து வீடு கட்டித்தரச் சொல்கிறபோதுகூட அதை இன்னும் துரிதமாகச் செய்துகொடுக்காமல் இவ்வளவு அசிரத்தையாக இருப்பது சரியல்ல. செலவழிக்க வேண்டிய பணத்தைச் செலவழிக்காமல் லாப்சாக விடுவதும் வருந்தத்தக்கது. அமைச்சர் அவர்கள் இந்தச் சேரி ஒழிப்புத் திட்டத்தை வேறு ஜில்லாக்களிலும் 6 இடங்களில் அமுலாக்கப் போவதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். மற்ற ஜில்லாக்களில் அவ்வேலை துரிதமாக நடைபெறச் செய்வதானது சென்னை நகராண்மைக் கழகத்திற்கும் வழி காட்டியாக இருக்கும் என்று கருதுகிறேன்.

சேரி ஒழிப்புத் திட்டம் சென்னையில் வந்து விட்டது என்பதால் பக்கத்திலுள்ள ஜில்லாக்களில் உள்ளவர்கள் சென்னைக்கு வந்து குடியேற ஆரம்பிக்கிறார்கள். ஆகவே சென்னையில் எப்படி முன்னால் அமுல் நடத்துகிறார்களோ அப்படியே செங்கல்பட்டு, சேலம்,

25th March 1961] [Srimathi A. S. Ponnammal]

மதுரை போன்ற மாவட்டங்களிலும் இதை முதலில் அமுல் நடத்தி வேலை செய்தால் நன்றாகயிருக்கும். பின்னர், குடிதண்ணீர் பிரச்னை. இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் என் தொகுதியாகிய நிலக்கோட்டையை எடுத்துக்கொண்டால் நிலக்கோட்டையும், சோழவந்தானும் சேர்க்கப்பட்டிருக்கிறது. எந்த திட்டத்திலும் இவை பின்னால்தான் எடுத்துக்கொள்ளப்படுகிறது. ஆஸ்பத்திரி கூட பின்னால்தான் வந்திருக்கிறது. ஆக, இந்த குடிதண்ணீர் திட்டத்தை சோழவந்தானிலும், நிலக்கோட்டையிலும் இந்த நடப்பாண்டிலேயே முதலில் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நிலக்கோட்டையை எடுத்துக்கொண்டால் அது ஒரு மேஜர் பஞ்சாயத்து. ஒரு தாலூகா தலைநகரம், அது. அங்குள்ள அதிகாரிகள் கூட குடிப்பதற்கு தண்ணீர் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே இந்த குடிதண்ணீர் திட்டத்தை இந்த ஆண்டிலே அமுல் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின்னர், நாஷனல் வாட்டர் சப்ளை ஸ்கீம் பொறுத்தவரை, அமைச்சர் அவர்களே அதன் தலைவராகயிருக்கிறார்கள். நாஷனல் வாட்டர் சப்ளை ஸ்கீமில் 95 சதவிகிதம் அரசாங்கம் கொடுக்கிறது, மீதி 5 சதவிகிதம் மக்கள், பஞ்சாயத்து கொடுக்கிறது. இந்த அடிப்படையில்தான் வேலை நடக்கிறது. ஒவ்வொரு மாவட்டத்திலும் இந்த வேலையை ஏற்று நடத்துகிறார்கள். இதை நடத்தக்கூடியவர்களுக்கு லாபம் வேண்டாமென்றாலும்கூட இதைச் செய்யும்போது ஒரு ஓவர்ஹெட் டாங்குக்குள்ள எஸ்டிமேட் குறைச்சல் என சொல்லுகிறார்கள். இதைப் போக்க மாகாணம் முழுவதிலும் நல்ல முறையில் ஆராய்ச்சி செய்து பார்த்து ஏதாவது ஒரு கமிட்டி போட்டு இதற்குக் காரணம் என்ன என்பதையெல்லாம் நன்கு தெரிந்துகொண்டு, லாபம் இல்லாவிட்டாலும் நஷ்டம் இல்லாதபடி இந்த வேலையைச் செய்ய வாய்ப்பு அளிக்கமுடியுமா என்பதையும் கவனித்து அமைச்சர் அவர்கள் இதையும் செய்து கொடுத்தால் இன்னும் நன்றாகயிருக்கும். அடுத்தபடியாக நகரசுத்தி தொழிலாளர்களை எடுத்துக்கொண்டால் அவர்கள் நிலைமை மோசமாகத்தான் இருக்கிறது. நகரசுத்தி தொழிலாளர்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம் போதாது. எவ்வளவோ வழிகளில் காரியங்கள் செய்கிறார்கள். ஆனால் இந்த நகரசுத்தி தொழிலாளர்கள் எல்லோரும் வேலைக்கு வராமல் இருந்தால் ஒரே மோசமான நிலைதான் ஏற்படும். ஆகவே, நகரசுத்தி தொழிலாளர்களுக்கு இன்னும் சம்பளத்தை உயர்த்திக் கொடுப்பதோடு அவர்களுக்கு வீட்டு வசதியும் செய்துகொடுக்கவேண்டும். அவர்களுக்கு கை வண்டிகள் கொடுக்கப்படுமென்று அமைச்சர் அவர்கள் பட்ஜெட் உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அவைகளை, எவ்வளவு சீக்கிரத்தில் வாங்கிக் கொடுக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரம் கொடுக்க வேண்டும். அப்படிக்கொடுத்து நல்லதொரு காரியத்தை செய்து கொடுக்கவேண்டும். கிராமங்களுக்கு பஞ்சாயத்துகளுக்கு மின்சாரம் கொடுக்கப்படுகிறது. அப்படிக் கொடுக்கும்போது அநேக இடங்களில் மிகவும் காலதாமதமாகிறது. அதிலும் குறிப்பாக ஹரிஜனங்கள் வசிக்கும் இடங்களில் பஞ்சாயத்து தலைவர்கள் அங்கே கொஞ்சம் பின்னால் பார்த்துக்கொள்ளலாம் என்ற அடிப்படையில் அதைத் தள்ளிப் போட்டுக்கொண்டே போகிறார்கள். இப்படிப்பட்ட நிலை ஏற்படக்கூடாது. எங்கெங்கு ஹரிஜனங்கள்

[Srimathi A. S. Ponnammal] [25th March 1961

இருக்கிறார்களோ அங்கு முதலில் மின்சாரம் கொடுக்கவேண்டு மென்ற நிபந்தனையைகூட கொடுத்தால்தான், ஹரிஜன மக்கள் வசிக்கக்கூடிய பகுதிகளில் நல்ல முறையில் மின்சாரம் கொடுக்க வாய்ப்பிருக்கும். பின்னர், ஹரிஜனங்களுக்கு விட்டு மனைகள் வழங்கப்படுகின்றன. அப்படி வழங்குவதிலும் மிகவும் காலதாமதம் ஏற்படுகிறது. ஒருசில இடங்களில் வீட்டுமனைகள் வழங்க 15, 20 வருடங்கள்கூட ஆகிறது. ஆகவே, அந்தந்த பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள், ஹரிஜன இலாகா அதிகாரிகள், கமிஷனர்கள் போன்ற வர்கள் சேர்ந்து ஒரு இடத்தை தேர்ந்தெடுத்து இதைக்கொடுக்க லாம் என்ற அடிப்படையில் வருவார்களேயானால் இதை நல்ல முறையில் நடத்த முடியும். ஆக, இவர்கள் எல்லோரும் சேர்ந்து இந்தக் காரியத்தைச் செய்தால் நன்றாகயிருக்குமென்று கூறிக் கொண்டு மறுமுறையும் இந்த மான்யத்தை ஆதரித்து என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI V. SANKARAN**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நகரசபைகள், கிராமப் பஞ்சாயத்துக்கள் போன்றவைகளில் நான்கு விஷயங்கள் முக்கிய மாக கவனிக்கப்பட வேண்டியவைகளாகயிருக்கின்றன. சாலைகள் அபிவிருத்தி, பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் வசதி, வடிகால் வசதி, சேரி புனரமைப்பு இவைகள் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டியவைகளாகும். இந்த நான்கு இனங்களுக்கும் வரும் ஆண்டிற்கு கணிசமான அளவு தொகை ஒதுக்கப்பட்டிருப்பது வரவேற்கத்தக்கது. போன ஆண்டைவிட இந்த ஆண்டு இவைகளுக்காக அதிகப்படியான தொகை ஒதுக்கப்பட்டிருக் கிறது. சென்னை சம்பந்தமாக, சென்னை நகராண்மைக் கழகம் சம்பந்தமாக மவுண்ரோட் போன்ற ரோடுகளை விசாலப்படுத்தவும், சீர்திருத்தவும் சென்னை நகராண்மைக் கழகத்திற்கு பிரத்தியேக நிதி வழங்கப்பட்டிருக்கிறது. மேல் பாலங்கள் கட்டவும் நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது. சென்னையைப் போன்று, மதுரை, கோவை போன்ற இடங்களிலும் இதேபோன்று அபிவிருத்தித் திட்டங்களுக்கு சர்க்கார் முன் வந்து உதவி அளிக்க வேண்டும். இதுபோன்ற பிரச்னைகள் சென்னைக்கு மட்டுமல்ல. மதுரை போன்ற நகரங்களிலும் ரோடுகளை விசாலப்படுத்துவது, சீர் திருத்தம் செய்வது, மேல் பாலங்கள் அமைப்பது இவைகள் அங்கும் செய்யப்படவேண்டும். சென்னை நகருக்கு மட்டுமுள்ள தனிப்பட்ட பிரச்னையல்ல, மதுரையில் மிகவும் அவசரமும் அவசிய முமான மேல் பாலங்கள் கட்டப்படவில்லை. அதை சீக்கிரம் கவனிக்கவேண்டும். லேட் ஹவுஸ் பாலம் போன்று மதுரையிலும் ஒரு மேல் பாலம் கட்ட ப்ரையாரிட்டி கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டது. ஆனால் இது மட்டும் கொஞ்சம் கால தாமதமாகிக்கொண்டு வருகிறது. இந்த அறிக்கையில் இதுபற்றி ஒன்றும் காணோம். சென்னை பாலங்களைப்பற்றி குறிப்பாக சொல்லப்பட்டிருக்கிறதே தவிர மதுரையில் உள்ள பாலத்தைப் பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. அங்குள்ள நிலை எல்லோருக்கும் தெரியும். நான் பல தடவை எடுத்து சொல்லியிருக்கிறேன்.

25th March 1961] [Sri V. Sankaran]

ஆனால், அங்குள்ள மக்கள், தங்கள் பிரதிநிதி இதுகுறித்து சப்தம் போடாமல், கத்தாமல் இருக்கிறார் போலிக்கிறது. ஆகவேதான் இது நடக்கவில்லை என்று அவர்கள் கேட்கிறார்கள். ஆகவே, மதுரையில் மேல் பாலங்கள் கட்டும் காரியத்தை இந்த ஆண்டிலேயே எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பவர் ஹவுஸ் பக்கத்திலுள்ளது எடுத்துக் கொள்ளப்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறதே தவிர இந்த ஆண்டு கூட அதை ஆரம்பிக்க முடியாதோ என்றுதான் தோன்றுகிறது. சீக்கிரம் திருப்பரங்குன்றம் ரோடில் இரண்டு மேல் பாலங்கள் அமைக்கப்படவேண்டும். அங்குள்ள நிலை எல்லோருக்கும் தெரியும். ஆனால் மந்திரிகள் சென்னையில் இருப்பதால் இங்குள்ள கஷ்டங்கள் தான் அதிகமாகத் தெரிகிறது. ஆகவே, மதுரையில் உள்ள ஜனங்கள் கஷ்டத்தைப் போக்க அங்கு இரண்டு மேல் பாலங்களை அமைப்பதற்கு வெகு விரைவில் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். பின்னர், ப்ரொடெக்டட் வாட்டர் சப்ளை பற்றி ஒரு வார்த்தை. பஞ்சாயத்து போர்ட் பிரசிடென்ட்ஸ் என்ன நினைக்கிறார்களோ அந்த இடம் தேர்ந்தெடுக்கப்படுகிறது. ரிசர்வாயர் டாங்க் ஓவர் ஹெட் டாங்க் எங்கு கட்டவேண்டும் என்று வரும்போது, பிரசிடென்ட் கருத்துப்படிதான் கடைசியில் நடக்கிறது. அவர் எங்கு கட்ட வேண்டுமென்று விரும்புகிறாரோ அங்குதான் கட்டப்படுகிறது. ஏற்கனவே இருக்கும் " **fraction** " காரணமாக, பிரிவுகள் காரணமாக அதை மனதில் வைத்துக்கொண்டு பிரசிடென்ட் தன்னை எதிர்ப்பவர்களின் வீட்டிற்கு முன்னால் அல்லது அதற்குப் பக்கத்தில் இடம் தேர்ந்தெடுத்து அங்கு ஓவர் ஹெட் டாங்க் கட்ட வேண்டுமென்று அந்த இடத்தை தேர்ந்தெடுக்கிறார்கள். இதுபற்றி கலெக்டரிடம் என் போன்றோர் போய் சொல்லும்போது, இது ஒரு பொதுப்பிரச்னை, எல்லோரும் கொஞ்சம் விட்டுக்கொடுத்துத்தான் போக வேண்டுமென்று சொல்கிறார். விட்டுக் கொடுக்க வேண்டுமென்பது, இது ஒரு ஜெனரல் ரூலாக இருக்கக்கூடாது. ஆகவே, இது குறித்து இன்ஸ்ட்ரக்ஷன்ஸ் கொடுக்கவேண்டும் கலெக்டர்களுக்கு. எல்லோரும் விட்டுக் கொடுக்க வேண்டுமென்று மதுரை மாவட்ட கலெக்டர் போன்றவர்கள் சொல்வது தவறான கருத்து. பொதுக் காரியமாக இருந்தாலும் நியாயத்திற்கு விரோதமாக தனி நபரின் உரிமையைப் பறிக்கக்கூடாது. ஆக, தனி நபரின் உரிமையைப் பாதிக்காது. மாற்று இடம் இருக்கும்போது அதை ஏன் எடுக்கக் கூடாது? ஆகவே, இப்படிப்பட்ட பிரச்னைகள் வரும்போது தனிப்பட்டவர்களின் உரிமைகள் பாதிக்காதபடி நன்கு ஆராய்ந்து பார்த்து வேறு வழியிருக்கிறதா என்று பார்த்து நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று மாவட்ட அதிகாரிகளுக்கு இன்ஸ்டிரக்ஷன் கொடுக்க கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு இரண்டு இனங்களில் நிதி குறைவாக இருக்கிறது. உதாரணமாக ஆண்டுதோறும் 8,000 ரூபாய் மாவட்ட கழகங்களுக்கு சாலை சீர்திருத்துவதற்காக கொடுக்கப்படுவதாக சொல்லப்பட்டிருக்கிறது. பக்கம் ஐந்தில் இவ்விதம் சொல்லப்பட்டிருக்

[Sri V. Sankaran] [25th March 1961

கிறது. பக்கம் 7-ல் ராமனுதபுரம், மதுரை ஜில்லாக்களுக்கு இந்த வருடம் பஞ்ச காலங்களில் வேலை கொடுக்க 10 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எட்டாவது
10-00 a.m. பக்கத்தில் நபர் ஒன்றுக்கு 40 ந. பை. வீதம் ரோடு ரிப்பேர் என்ற வகையில் பஞ்சாயத்துகளுக்கு கொடுக்கப்படும் என்று சொல்லப் பட்டிருக்கிறது. இது மிகவும் குறைவு. இவைகள் டோக்கன் கிராண்ட் என்ற முறையில்தான் இது இருக்கிறது. இதன் மூலம் போதிய பயன் கிடைக்காது என்பதுதான் என் அபிப்பிராயம். வெள்ளப் பெருக்கால் பாதிக்கப்பட்ட மதுரை போன்ற இடங்களுக்கு ஏற்கனவே நிவாரண நிதி வழங்கப்பட்டிருக்கிறது. அங்குள்ள ஆற்றோரங்களைப்பற்றி முன்னலேயே இங்கு சொல்லியிருக்கிறேன். ஆற்றோரங்களில் ஏழைகள் குடியிருப்பதற்காக ஆக்கிரமிப்பு செய்திருக்கிருர்கள். இதன் காரணமாக வெள்ளப் பெருக்கு ஏற்படும்போது எல்லாம் மிகுந்த சேதங்கள் ஏற்படுகின்றன. அந்த நேரத்தில் எல்லாம் லட்சக்கணக்கான ரூபாய் அரசாங்கம் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. அதோடு ஆற்றோரங்களில் இவ்விதம் குடியிருப்பதின் காரணமாக பல தொத்து நோய்கள் அழுக்குத் தண்ணீர் சேருவதால் ஏற்படுகின்றன. இதனல் மதுரை நகர் பெரிதும் பாதிக்கப்படக்கூடும். ஆகவே ஆற்றோரங்களில் இருக்கும் ஏழைகளை அப்புறப்படுத்தி வேறு இடம் அவர்களுக்கு கொடுக்கவேண்டும். இவ்விதம் அவர்களை காலி செய்துவிட்டு அதில் எனக்கு முன்னல் ஒரு பிரதிநிதி அவர்கள் சொன்னதுபோல் ஆற்றோரமாக பூங்கா வைக்கவோ அல்லது ரோடுகள் அமைக்கவோ செய்தால் நன்ருக இருக்கும். இவ்விதம் மாற்றி அமைக்காவிட்டால் வெள்ளப்பெருக்கு ஏற்படும்போதெல்லாம் சர்க்கார் லட்சக்கணக்கான ரூபாய் செலவு செய்யவேண்டியிருக்கிறது. அதோடு தொத்துநோய் ஏற்படுவதற்கும் ஏதுவாக இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். அதேபோன்று நல்ல உபயோககரமான பல நல்ல இடங்கள் மதுரையில் இருக்கின்றன. திடீர் நகரம் என்ற ஒரு இடம் இருக்கிறது. திடீர் என்று அந்த இடத்தில் மக்கள் குடியேறி தங்க ஆரம்பித்தார்கள். இதன் காரணமாக இந்த இடத்திற்கு திடீர்நகரம் என்று சொல்வதுண்டு. இதிலும் ஏழைகள் குடியிருக்கிருர்கள். இது பொதுஜன நலத்திற்கும், வசதிக்கும் உபயோகப்படுத்தவேண்டிய நல்ல இடம். அவர்களையும் அப்புறப்படுத்தி, அவர்களுக்கு வேறு குடியிருக்க இடம் கொடுக்கவேண்டும். இந்த இடத்தை பொது காரியத்திற்காக உபயோகிக்கவேண்டும். ஆகவே இதில் உடனடியாக வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். பல வருடங்கள் இந்த நடவடிக்கைகள் (பெண்டிங்) தாமதமாக இருந்து வருகின்றன. ஆகவே இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மதுரையில் குடிதண்ணீர் வழங்கும் திட்டம் இன்னும் பூரணமாக நிறைவேற்றப்படவில்லை. மேலக்கால் திட்டம் என்ன நிலையில் இருக்கிறது என்று தெரியவில்லை. அதோடு வைகை அணையிலிருந்து தண்ணீர் கொண்டு வருவதற்கும் திட்டம் இருக்கிறது. சீக்கிரத்தில் இதற்கான பரிசீலனை எல்லாம் முடிவடைந்துவிடும் என்று எண்ணுகிறேன். வைகை அணைக்கட்டு கட்டியபின்

25th March 1961] [Sri V. Sankaran]

தொடர்ந்து வைகையாற்றில் தண்ணீர் விடப்பட்டிருக்கிறது. ஆதலால் மதுரை நகரத்திற்கு தண்ணீர் தேவை இல்லை என்று பலர் கருதலாம். அரசாங்கமும் அவ்விதம் நினைத்துக்கொண்டிருக்கலாம். ஆனால் இப்போதுகூட நகரில் சில இடங்களுக்கு தண்ணீர் கிடைப்பது இல்லை. அதிலும் நகரம் வளர்ந்து கொண்டே போகிறது. அதோடு மேலே ஆற்றில் அணை போட்டுவிடுவதால் கீழ் இடங்களில் தண்ணீர் மட்டம் இறங்கிக் கொண்டே போகிறது. ஊற்று முன்போல் வருவதில்லை. ஆகவே மதுரையை வைகை அணையிலிருந்து இணைக்கக்கூடிய திட்டம் ஒன்றிருக்கிறது. அதை உடனடியாக எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மதுரை முனிசிபாலிட்டி சம்பந்தமாக, முன்னால் பஸ்-ஸ்டான்டில் பக்கத்தில் இருந்த ஆஸ்பத்திரி இப்போது காலி செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஆஸ்பத்திரி முன்னால் முனிசிபாலிட்டியின் கையில் இருக்கிறது. பஸ் ஸ்டான்ட் பக்கத்திலேயே இருக்கிறது. இதில் இப்போது வேறு பல ஆபீஸ்கள் இருந்து கொண்டிருக்கின்றன. இதை இப்போது காரியாலய வகைக்காக மதுரை முனிசிபாலிட்டியார் கேட்டிருக்கின்றனர். ஆகவே இதை முனிசிபாலிட்டிக்கு அதிக விலையில்லாமல் சீக்கிரமாகவே கொடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சென்னை சி.ஐ.டி. சம்பந்தமாக பல காலனிகள் அமைத்து விடுகள் கட்டிக்கொடுக்கிறார்கள். ஏற்கனவே வீடு வசதி இருப்பவர்களுக்கும், வெளியில் மதுரை கோயம்புத்தூர் போன்ற வெளியிடங்களில் வீடு இருக்கின்றவர்களுக்குகூட வீடுகள் எல்லாம் பண்ணி கொடுக்கிறார்கள். இது எந்த அடிப்படையில் கொடுக்கப்படுகிறது என்று தெரியவில்லை. இதைப்பற்றியும் அமைச்சர் அவர்கள் விளக்கினால் நன்றாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* **SRI A. MARIAPPAN** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மான்யத்தை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். இந்த மான்யத்தில் குடி தண்ணீர் வசதி செய்து கொடுப்பதற்காக ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. சேலம் ஜில்லாவில் கழிந்த இரண்டு மூன்று ஆண்டுகளாக மழை இல்லாததின் காரணமாக குடிதண்ணீர் கிடைக்காமல் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். குறிப்பாக இரண்டு மாதங்களுக்கு முன்பு சிறிய கிராமங்களிலும், பெரிய பஞ்சாயத்துகளிலும் ஏற்கனவே கட்டி முடிக்கப்பட்ட ஓவர் ஹெட் டாங்க்குகளில் எல்லாம் தண்ணீர் இல்லாததின் காரணமாக அங்குள்ள மக்கள் கிணறுகளில் இருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டு இருந்தார்கள். கிணறுகளிலும் தண்ணீர் இல்லாத நிலைமைதான் இருந்து கொண்டிருக்கிறது. முக்கியமாக சேலம் தாலூகா, திருச்செங்கோடு தாலூகா போன்ற இடங்களில் எல்லாம் போர்வெல் இல்லாமல் இருக்கின்றன. அந்த இடங்களில் எல்லாம் போர்

வெல் எடுத்துக்கொடுத்து வசதி செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதே போன்று சேலம் நகரத்தைப் பொறுத்த மட்டில் ரோடுகள் எல்லாம் மிக மோசமாய் இருக்கின்றன. இரண்டு மாதங்களுக்கு முன்னால் சென்னையிலுள்ள ரோடுகள் எல்லாம் எவ்விதம் இருந்ததோ அதே மாதிரி ரோடுகள் எல்லாம் மோசமாக இருந்து கொண்டிருக்கின்றன. இவைகளை செப்பனிடுவதற்காக சேலம் நகரசபையார் 15 லட்சம் ரூபாய் கடனாக தர வேண்டும் என்று சர்க்காரை கேட்டிருந்தார்கள். அதற்கு சேலத்தில் குழாய்கள் போடுவதற்காக செலவு செய்யவேண்டியிருக்கிறது. ஆதலால் இந்தத் தொகை தருவதற்கில்லை என்று நமது தமிழ் நாட்டு சர்க்கார் சொல்லியிருக்கிறார்கள். குடிதண்ணீர் வசதி செய்து கொடுப்பதற்கு வேண்டிய வேலைகள் இன்னும் ஐந்து வருடங்கள் நடந்து வரும். ஏனென்றால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 45 லட்சம் ரூபாய் செலவு செய்ய திட்டம் போடப்பட்டிருக்கிறது. மூன்றாவது திட்டத்தில் 85 லட்சம் ரூபாய்க்கு நடைபெறுவதற்கு திட்டங்கள் போடப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த வேலைகள் எல்லாம் நடைபெறுவதற்கு இன்னும் சில ஆண்டுகள் ஆகும். ஆகவே இந்த ரோடுகளின் நிலைமையை இப்படியே வைத்துக்கொண்டிருந்தால் ரோடுகளில் நடந்துகூட போக முடியாது. சைக்கிளிலும் போக முடியாது. அந்த நிலைமைக்கு வந்து விடும். ஆகவே அமைச்சர் அவர்கள் இதில் தக்க கவனம் செலுத்தி வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். அதோடு ரோடுகளை சீரமைப்பதற்காக முனிசிபாலிட்டி கேட்டிருக்கும் தொகையை மான்யமாக கொடுத்து உதவ வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதே போன்று சேலம் நகரத்தை பொறுத்தமட்டில் பாதாள சாக்கடை வசதி செய்து தருவதற்காக அந்த நகர சபையார் அரசாங்கத்தை நெடுங்காலமாக கேட்டுக் கொண்டேயிருக்கிறார்கள். ஆகவே அதற்கும் வேண்டிய நிதி ஒதுக்கி அதை உடனடியாக நடத்தித்தர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

குறிப்பாக ரோடுகளை பொறுத்தமட்டில் நகரங்களில் ஓடுகின்ற வண்டிகளை டயர் வண்டிகளாக மாற்றினால், அதற்காக சர்க்கார் மான்யமாக கொடுக்க முன்வந்தால் ரோடுகள் பழுதாகாமல் பார்த்துக்கொள்ள முடியும். இதைப்பற்றியும் பரிசீலனை செய்து ஏதாவது ஒரு திட்டத்தைக்கொண்டு வர முடியுமா என்பதைப் பற்றியும் ஆலோசிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஸ்லம் க்ளியரன்ஸ் திட்டத்தைப் பொறுத்தவரையில் வேலைகள் அதிகமாக நடைபெறுவதாக தெரியவில்லை. இதற்கும் அமைச்சர் அவர்கள் வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஸ்லம் க்ளியரன்சை பொறுத்தவரை முனிசிபாலிட்டிக்கு சொந்தமான நிலங்கள் வேண்டுமென்று முனிசிபாலிட்டி கோரியிருக்கிறது. ஆகவே நிலங்களை கூடுதல் விலை கொடுத்து வாங்கியாவது முனிசிபாலிட்டிக்குக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சேலம் நகரத்தைப் பொறுத்தமட்டில் அரிஜனங்கள் குடியிருக்கும் இடங்கள் எல்லாம் மிக

25th March 1961] [Sri A. Mariappan]

மோசமாக இருக்கின்றது. அந்தப் பகுதியில் எல்லாம் மழை காலத்தில் முழங்கால் அளவுக்கு சேற்றில் பதியக்கூடிய நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. அந்தப் பகுதிகளை நம்முடைய மரா மத்து இலாகா அமைச்சர் அவர்கள்கூட நேரில் வந்து பார்த் திருக்கிறார். அம்மாதிரி ஹரிஜனங்கள் குடியிருக்கக்கூடிய பகுதி கவனிக்கப்படாமல் இருக்கின்றன. கிராமங்களில் இருக்கக்கூடிய ஹரிஜனங்களுக்கு மட்டும் ஓரளவு உதவி செய்கிறார்களே தவிர, அதல்லாமல் நகரங்களில் இருக்கும் சேரிகளை நல்ல முறையில் வைப்பதற்கு நமது மாகாண அரசாங்கம் முன் வரவேண்டும்.

அதோடு சேலம் ஜில்லாவைப் பொறுத்த வரையில் நாஷனல் வாட்டர் சப்ளை ஸ்கீம் இன்னும் கொடுக்கப்படவில்லை. சேலம் ஜில்லா இந்த மாகாணத்திலேயே மிகவும் வரண்ட பிரதேசம் என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். சென்ற ஆண்டிலே நமது மாகாணத்தில் எல்லா பகுதிகளிலும் மழை நன்றாகப் பெய் திருக்கிறது—சேலம் ஜில்லாவில் மட்டும் மழை பெய்யவில்லை. அதிகமாக குடிதண்ணீர் பஞ்சம் இருக்கிற அந்தப் பகுதிக்கு நாஷனல் வாட்டர் சப்ளை ஸ்கீம் வரவில்லை. அங்கும் கொண்டு வரவேண்டும் என்று அமைச்சர் அவர்களிடம் வற்புறுத்திக்கூற விரும்புகிறேன்.

சேலம் ரயில்வே நிலையத்தைப் பொறுத்த வரையில் மேம் பாலங்கள் கட்டவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அங்கு இருக்கக்கூடிய ரயில்பாதை சேலம் நகரத்தை இரண்டாகப் பிரிக்கிறது. அம்மாதிரிப் பிரிக்கும்போது இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கத்திற்குப் போக முடியவில்லை என்று நிலைமை இருக் கிறது. நெடு நாட்களாக மேம்பாலம் கட்டவேண்டுமென்று வற்புறுத்திக்கொண்டு வருகிறோம். மத்தியசர்க்காரைப் பொறுத்த வரையில் இதற்கான நிதிகளை ஒதுக்கி மாகாண சர்க்காருக்குக் கொடுத்திருக்கிறோம், மாகாண அரசாங்கம் அதற்கென செல விடாமல் பொது நிதியில் சேர்த்திருக்கிறது என்று மத்திய சர்க்கார் அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். எந்த நிலையில் இருந்தாலும் சேலம் போன்ற இடங்களில் மேம்பாலம் கட்டுவதில், நகர சபைகளைப் பொறுத்த வரையில் அவர்களுக்கு பண வசதி இல்லை, ஆகையால் மாகாண அரசாங்கமே முன் வந்து சேலம் போன்ற இடங்களில் மேம்பாலம் கட்டிக்கொடுக்கவேண்டும் என்று வற்புறுத்திக் கூறு கிறேன். சென்னை போன்ற இடங்களிலும் ஏனைய இடங்களிலும் கட்ட ஏற்பாடு செய்திருப்பதைப் பாராட்டுவதோடு சேலம் போன்ற இடங்களிலும் கட்ட ஏற்பாடு செய்யவேண்டுமென்று வற்புறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

சேலத்திலே இரண்டே இரண்டு நகர சபைகள் இருக்கின்றன —ஒன்று சேலம், மற்றொன்று ராசீபுரம். ராசிபுரத்தைப் பொறுத்த வரையில் குடிதண்ணீர் நிலைமை மிக மோசமாக இருந்து கொண்டிருக்கிறது. அநேக அமைச்சர்கள் அந்தப் பகுதியில் வந்து பார்த்திருக்கிறார்கள். கிணறுகளைப் பார்க்கும்போது பாதாளத்தில் தண்ணீர் இருப்பதைப் பார்த்து பிரமித்துப் போனார்கள். பல ஆண்டுகளாக குடிதண்ணீர் நிலைமை மோசமாக இருந்தும் கவனிக்

[Sri A. Mariappan] [25th March 1961

கப்படாமல் இருக்கிறது. ஆகையால் உடனடியாக குடிதண்ணீருக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று வற்புறுத்திக் கூறிக் கொள்ளுகிறேன்.

அதோடு மட்டுமல்லாமல் ராசீபுரம் ஏரியில் பல கிணறுகளைத் தோண்டி அதன் மூலம் உடனடியாக தண்ணீர் சப்ளை செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். அங்கு இருக்கக்கூடிய ஏரிகளில் கிணறுகளைத் தோண்டவேண்டுமென்று பல நாட்களாகச் சொல்லப்பட்டு வருகிறது. நேரில் விஜயம் செய்த மந்திரிகளும் கிணறு தோண்டவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். சேலம் ஜில்லா கலெக்டர் அவர்களும் கிணறு தோண்ட வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதாகக் கூறியிருக்கிறார்கள். இது வரையில் எந்தவிதமான கிணறும் தோண்ட ஏற்பாடு செய்யப்படவில்லை. அங்கு உடனடியாக கிணறுகளைத் தோண்டிக்கொடுத்து அதன் மூலம் குடிதண்ணீர் பஞ்சத்தை நீக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

அதேமாதிரி ஓவர் ஹெட் டாங்கை கிராமங்களில், மேஜர் பஞ்சாயத்துக்களில், சிறிய பஞ்சாயத்துக்களில் குடிதண்ணீர் சப்ளைக்காக ஏற்பாடு செய்யும்போது ஒவ்வொரு இடத்திலும், ஒவ்வொரு இலாகாவிலும் நீண்ட நாள் எடுத்துக்கொள்வதால் கஷ்டப்படவேண்டியிருக்கிறது. அதுவும் பப்ளிக் ஹெல்த் ஏ.ஈ.-ஆக இருந்தாலும் அல்லது என்ஜினீயரிங் செக்ஷனுக்கு சென்றால் நீண்ட நாள் ஆகிறது. ஒவ்வொரு இலாகாவிற்கும் அந்த பேப்பரோடு சென்று பார்த்தும் இந்த ஆண்டில் தொடங்கி நிறைவேற்றும் நிலைமை இல்லை. பல இடங்களில் குடிதண்ணீருக்காக உடனடியாக வேலை செய்திருக்கிறார்கள். அதற்காக நான் நமது அரசாங்கத்தையும் உத்தியோகஸ்தர்களையும் பாராட்டுகிறேன். சில சில இடங்களில் பல ஆண்டுகளாக பேப்பர் பின்னால் சென்று கொண்டிருந்தாலும் அவைகள் நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன. அவைகளை நிறைவேற்றுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்று அமைச்சர் அவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**Sri P. S. Chinnadurai** : மதிப்புக்குரிய உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையிலே நகரங்களின் சாலை அபிவிருத்திக்கும், குடி தண்ணீர் போன்றவைகளுக்கும் அனுதாபம் காட்டுகிற முறையில் அதிகமான தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் காண்கிறேன். நகரங்களை மிக உயர்வாகக் கருதும் அதே நேரத்தில் கிராமங்களைப் புறக்கணிக்கிற முறையிலே கிராமங்களுக்கு குடிதண்ணீர் வசதி வழங்குவதற்கோ அல்லது சாலைகளை அபிவிருத்தி செய்வதற்கோ போதுமான தொகை ஒதுக்கப்படவில்லை என்றும் நான் இங்கே எடுத்துக்காட்ட விரும்புகிறேன். கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் மத்தியில் இருக்கிற இந்த மிகப் பெரிய ஏற்றத்தாழ்வு மிகவும் கொடுமையானது. வேறு காலத்தில் இதனை கிராம மக்கள் பொறுத்துக் கொண்டிருந்தாலும் இந்தக்காலத்திலே—சுதந்திரம் அடைந்திருக்கிற இந்தக் காலத்திலே—ஜனநாயகம் நிலவுகிற இந்தக் காலத்திலே—இப்படிப்பட்ட ஒரு கொடுமையான மனப்பான்மையை மக்கள் பொருத்துக்கொள்ள முடியாது என்று நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

25th March 1961] [Sri P. S. Chinnadurai]

சென்னை நகரத்திலே சென்ற ஆண்டு மழை பெய்து சாலைகள் பழுதுபட்டு விட்டன. உடனே மிகப் பெரிய கூக்குரல் எழுந்தது. பத்திரிகைகள், அரசியல் வாதிகள், மற்றும் பலரும் உடனே சென்னை நகரத்திலுள்ள சாலைகளை கவனிக்கவேண்டும் என்பதற்கான கூக்குரல் போட்டார்கள். அதன் விளைவாக சென்னை கார்ப்பொரேஷனுக்கு அதிகமான தொகை உதவி அளிப்பதற்காக இந்த மான்யம் கோரப்பட்டிருக்கிறது என்று பார்க்கிறோம். இந்த அளவில் கிராம மக்களின் கோரிக்கைகளை எடுத்துக் கூறவோ அல்லது கிராம மக்களுக்கு ஆதரவாக ஒரு பெரிய கிளர்ச்சியைத் துவங்கவோ பத்திரிகைகளோ அல்லது போதுமான அளவு அரசியல் சக்திகளோ இல்லாத நிலைமையைத்தான் பார்க்கிறோம். இதெல்லாம் அரசாங்கத்திற்குத் தெரியாததல்ல. கிளர்ச்சி செய்தால்தான் உதவி செய்வது, கிளர்ச்சி செய்யாமல் போனால் கவனிக்கிற மாதிரி பாவனை செய்வது என்று அரசாங்கம் ஒரு கொள்கையாக ஏற்று வருவார்களானால் நிச்சயமாக இந்த அரசாங்கம் ஒரு க்ஷேம நல அரசாங்கத்தை நோக்கி மக்களைச் செலுத்துகிற அரசாங்கமாக ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று சொல்ல விரும்புகிறேன். சென்ற ஆண்டு குடிதண்ணீர் வசதிக்காக என்று எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டதோ அதை விட இந்த ஆண்டு ஒதுக்கப்படுகிற தொகை மிகக் குறைவாக இருக்கிறது. சென்ற ஆண்டு குடிதண்ணீருக்காகவும் மற்றும் வடிகால் திட்டங்களுக்காக 16 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருந்தார்கள், ஆனால் வருகிற ஆண்டு 14 லட்சம் ரூபாய்தான் உதவி என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே போன்று சென்ற ஆண்டு புதிய பாதைகளுக்காக 49 லட்சம் ரூபாய் கோரப்பட்டது. ஆனால் இந்த ஆண்டு கோருவது 32 லட்சம்தான். அதேபோல பத்திய அரசாங்கத்தினரின் உதவி பெற்று நிறைவேற்றுகிற சாலைகள் பொறுத்த வரையில் சென்ற ஆண்டு 18 லட்சம் ரூபாய் என்றால் இந்த ஆண்டு 13 லட்சம் ரூபாய் தான் கோரப்பட்டிருக்கிறது. இப்படி குறைவான தொகையை பெரும்பாலான காரியங்களுக்கு கோருவதன் அர்த்தம் என்ன? கிராமங்கள் என்றென்றைக்கும் மட்ட ரகமான ரோடுகளுடன் இருக்க வேண்டும் என்று அரசாங்கம் கருதுகிறதா? கிராமங்களில் மண் ரோடுகள் இருந்தால் போதுமானது, கப்பி போட்ட சாலைகளோ, தார் போட்ட சாலைகளோ வேண்டாமென்று அரசாங்கம் கருதுகிறதா? இதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நகரங்களில் இருக்கிற தார் ரோடுகளை அழித்து சிமெண்ட் ரோடு போடுவதைப் பார்க்கிறோம். கப்பி ரோடுகளை மாற்றி தார் ரோடு போடுவதைப் பார்க்கிறோம். கிராமங்களில் மாத்திரம் பழைய நிலையிலேயே பெரிய சாலைகளோடு இணைக்கும் நிலைமைகூட இல்லாமல் இடையூறாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்ற நிலைமையை அரசாங்கம் ஏன் உணர மறுக்கிறது என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன். பெரும்பாலான கிராமங்களில் இன்றைக்கு குடிதண்ணீர் வசதி போதாது. கிராமங்களிலே மாத்திரமல்ல, பஞ்சாயத்துக்களிலும்கூட குடிதண்ணீர் வசதி கிடையாது. தொழிலாளர்கள் வசிக்கின்ற மிகப் பெரிய பஞ்சாயத்துக்களாகிய சிங்காநல்லூர், உப்பிளிபாளையம், பீளமேடு, வெள்ளலூர் போன்ற பஞ்சாயத்துக்

[Sri P. S. Chinnadurai] [25th March 1961

களிலும் பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் வசதி கிடையாது. அங்கே குடிதண்ணீர் வசதி செய்வதற்கான முறையிலே ஏதாவது இந்த ஆண்டிலாவது ஏற்பாடுகள் செய்ய இந்த அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா என்று பட்ஜெட் மான்யத்திலே பார்த்தால், இந்த ஆண்டிலும் சர்க்காருக்கு அந்த உத்தேசம் இல்லை என்பதைத்தான் பார்க்கின்றோம். இதுபோன்று கிராம மக்கள் அதிகமாக வசிக்கின்ற பல்லடம், காங்கேயம் போன்ற பகுதிகளிலும் குடிதண்ணீர் திட்ட ஏற்பாடுகள் வருகின்ற ஆண்டிலே செய்யப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் அதுவும் இல்லை. தொழிலாளர் வசிக்கின்ற பகுதிக்கும் அதே கதிதான். கிராமப் பகுதிகளாக இருந்தாலும், தொழிலாளர்கள், விவசாயிகள் வசிக்கின்ற பகுதிகளாக இருந்தாலும் இரண்டிற்கும் அதே கதிதான். இந்த முறையிலே கிராமங்கள் புறக்கணிக்கப்படுகின்றதைப் பார்க்கின்றோம். இந்த நிலையை மாற்றியமைக்க வேண்டுமென்று நான் உறுதியாகச் சொல்ல விரும்புகிறேன். நகரங்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதைக் காட்டிலும், அதிகமான முக்கியத்துவத்தை கிராமங்களுக்கு காட்ட வேண்டும். இந்த பாரபட்சமான ஒரு கொள்கையை அரசாங்கம் கடைப்பிடிப்பதை விட்டு, கிராமங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்றும், குறிப்பாக, மைனர், மேஜர் பஞ்சாயத்துக்களுக்கு அதிகமான முக்கியத்துவம் கொடுத்து, குடிதண்ணீர் திட்டத்தையும், வடிகால் திட்டத்தையும் அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தொழிலாளர்கள் மிகவும் அதிகமாக வசிக்கின்ற ஒரு பெரிய பஞ்சாயத்து வெள்ளலூர். இதிலே 15,000 பேருக்கு அதிகமாக வசிக்கிறார்கள். இந்த ஊருக்கு குடிதண்ணீர் வசதி கிடையாது. சாக்கடைத் திட்டத்தையும் இதுவரைக்கும் அங்கே கொண்டுவந்து நிறைவேற்றவில்லை. இதையெல்லாம் பஞ்சாயத்து வருமானத்திலிருந்து நிறைவேற்ற வேண்டுமென்று சொன்னால், அது முடியாத காரியம். ஆகவே இதற்கான செலவை சர்க்கார் கொடுத்து உதவி செய்ய முன் வரவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். இந்த சர்க்கார் இதுவரை எந்தெந்த மேஜர் பஞ்சாயத்துக்களுக்கு புதை சாக்கடைத் திட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள் என்பதை நான் கேட்டு தெரிந்து கொள்ள விரும்புகிறேன். புதை சாக்கடைத் திட்டங்கள் பெரிய பெரிய நகரங்களுக்கு மாத்திரம்தான் இருக்கவேண்டுமா ? சிறிய நகரங்களுக்கு இருக்கக்கூடாதா என்று நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அதேபோல் தண்ணீர் திட்டத்தை நிறைவேற்றுவதிலும் சில சங்கடங்கள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவைகளை எடுத்துக்காட்ட வேண்டும்.

கிராமங்களிலே அங்கிருக்கக்கூடிய கிணற்றிலே பம்பு செட்டு வைத்து ஊருக்குள் தண்ணீரை விநியோகம் செய்வதற்கு வசதி செய்து தரவேண்டுமென்று கோரினால், அது நல்ல தண்ணீரா என்று பார்க்கிறார்கள். அங்கே இருக்கக்கூடிய தண்ணீரை குடித்துத்தான் அங்கிருக்கக்கூடியவர்கள் வெகுநாட்களாக வாழ்ந்து வருகிறார்கள். பல தலைமுறைகளாக அங்கு வாழ்ந்து வருகிறார்கள். ஆனால் திடீரென இன்றைக்கு அந்தத் தண்ணீர் குடிப்பதற்கு லாயக்கானதல்ல என்று அரசாங்க நிபுணர்களால்

25th March 1961] [Sri P. S. Chinnadurai]

சொல்லப்படுகின்றது. அப்படி சொல்லப்படுவதாலே அவர்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் வசதியே ஏற்படுவதில்லை. இதன் காரணமாக பல திட்டங்கள் நிறைவேற்றப்படாமல் விடப் படுகின்றன. இந்தக் குறையைப் போக்குவதற்கு அரசாங்கம் முன்னுக்கு வரவேண்டும். அந்த கிராமங்களிலே உள்ள மக்கள் தங்களுக்கு தண்ணீர் வசதி வேண்டுமென்று கேட்டால், அவர்கள் அதே தண்ணீரை பல ஆண்டு காலங்களாக உபயோகப்படுத்திக் கொண்டு வருவதால், அவர்களுக்கு சுலபமான முறையிலே தண்ணீர் வசதி கிடைப்பதற்கான ஏற்பாடுகளை இந்த அரசாங்கம் செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் வரையிலே சம்பந்தப்பட்ட சாலைகளுக்கு 40 நயா பைசா ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப் படுகிறது. வளமான பஞ்சாயத்தாக இருந்தால் பரவாயில்லை. ஆனால் பல்லடம் பஞ்சாயத்து யூனியன் போன்ற பஞ்சாயத்துக் களுக்கு கொஞ்சம் இந்தத் தொகையை அதிகப்படுத்த வேண்டும். இப்போது சொல்லப்படுகிற 40 நயா பைசா ஒருபோதும் போதாது. அதை அதிகப்படுத்துவதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்றும், இப்போது ஒதுக்கப்பட்டுள்ளது சாலைகளை நல்ல முறையிலே பராமரிப்பதற்கு போதாது என்பதையும் நான் சொல்லிக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள் கிறேன்.

* SRI K. S. ARDHANAREESWARA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக் கக் கூடிய இந்த மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். குறிப்பாக, இந்த குடிதண்ணீரைப் பொறுத்த மட்டிலும், எனக்கு முன்பு பேசிய நண்பர் அவர்கள் சொன்னது போல், ஒவ்வொரு கிராமத்திற்கும் அங்குள்ள தண்ணீர் குடிப் பதற்கு லாயக்காக இருக்கிறதா என்று பரிசீலனைக்கு அனுப்பப் பட்டால், அது பரிசீலனை செய்யப்பட்டு வருவதற்கு மிகவும் கால தாமதமாகிறது. அப்படி காலதாமதமானாலும்கூட, அங்குள்ள தண்ணீரை கடைசியில் குடிப்பதற்கு லாயக்கில்லை என்று சொல்லப் படுகிறது. கிராமங்களிலே அவர்கள் ஏற்கனவே குடித்துக் கொண்டு வந்த தண்ணீரை லாயக்கில்லை என்று சொல்கிறார்கள். அப்படி இருந்தால் வேறு மாற்றுத் திட்டம் போட்டாலும் பரவா யில்லை. அதையும் சீக்கிரம் செய்வதில்லை. தினந்தோறும் குடிப் பதற்கு தண்ணீர் இல்லாமல் மக்கள் இருக்க முடியாது என்பது தெரிந்தும், இதிலே காலதாமதம் செய்யப்படுவதைப் பார்க்கும் போது மிகவும் வருத்தப்பட வேண்டியிருக்கிறது. அதற்காக உடனடியாக தக்க நடவடிக்கைகள் எடுத்து, நல்ல முறையிலே இந்தத் திட்டத்தை விஸ்தரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள் கிறேன்.

அடுத்ததாக, மேட்டூர் டவுன்ஷிப் கமிட்டி நிர்வாகமானது மக்களுக்கு மிகவும் பிரயோஜனமற்ற முறையிலே இருக்கிறது என்பதை இந்த நேரத்தில் கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். ஏனென்றால், நம் முடைய மாகாணத்திலே அந்த இடத்திலே நல்ல திட்டங்களையும், தொழில்களையும் வளர்க்கப் போகின்றார்கள் என்று சொல்லிக்

[Sri K. S. Ardhanareeswara Gounder] [25th March 1961

கொண்டிருக்கிறார்கள். ஆனால் அப்படிப்பட்ட இடத்திலே உள்ள மக்களுக்கு நல்ல முறையிலே குடிதண்ணீர் வசதி கிடையாது, ரோடு வசதி கிடையாது. தினந்தோறும் அவர்கள் ஒதுங்குவதற்கு அங்கு கக்கூஸ் வசதிகூட கிடையாது. இது மிகவும் வருத்தப்படக் கூடிய விஷயமாகும். இதைப் பல தடவைகள் எடுத்துச் சொல்லி யும், அது நிறைவேற்றப்படாமல் இருப்பதைப் பார்த்து மிகவும் வருந்துகிறேன்.

அந்த நகரத்திலே டவுன்ஷிப் கமிட்டி இருப்பதினாலே, அங்கிருக்கக்கூடிய குழந்தைகளுக்கு ஒன்றிரண்டு பள்ளிக்கூடங் கள்தான் இருக்கின்றன. அதுவும் அதிகமாக தொழிலாளர்கள் வசிக்கக்கூடிய அந்த பிரதேசத்திலே உடனடியாக பல இடங் களிலேயும் பள்ளிக்கூடங்கள் இருக்க வேண்டியது மிகவும் அவசிய மாகும். இப்போது மிகவும் பிற்போக்கான கிராமங்களிலே யெல்லாம் பள்ளிக்கூடங்கள் இருக்கும்போது, இப்படி தொழி லாளர்கள் அதிகமாக வசிக்கக்கூடிய இடத்தில் பள்ளிக்கூடங்கள் இல்லாதது ஒரு பெரும் குறையாக இருக்கிறது. இதுவும் மிகவும் அவசரத்தக்கதாக இருக்கிறது. ஆகவே உடனடியாக இதையும் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்ததாக, அந்த ஊரிலே ஒரு சினிமாக் கொட்டகை இருக்கிறது. அந்த நகரத்திலே பல உத்தியோகஸ்தர்கள் இருக் கிறார்கள். பல ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் இருக்கிறார்கள். ஆனால் அங்கு பார்த்தால் கீத்துக் கொட்டகைதான் இருக்கிறது. அந்த சினிமா கொட்டகை இருக்கக்கூடிய நிலம் சர்க்காருக்கு சொந்தமானதால், அதை அவர்கள் ஏலத்திற்கு விட்டிருக்கிறார்கள். நிலம் மட்டும் கிட்டத்தட்ட ஒரு ஏக்கர் இருக்கும். அதிலே வருஷம் ஒன்றுக்கு 13,000 ரூபாய் குத்தகைப் பணமாக சர்க்காருக்கு கிடைக்கிறது. இது வரவேற்கத் தகுந்த விஷயம். சர்க்கார் அந்த இடத்திலே, அதுவும் டவுன்ஷிப் கமிட்டி நிர்வாகம் நல்ல முறை யிலே நடப்பதற்கும், ஒரு சினிமா கட்டிடத்தையே அங்கு கட்டினால் அதிலே சர்க்கார் போடக்கூடிய முதலீட்டுக்குத் தகுந்த அதிக வருமானம் கிடைக்குமென்பதையும் இந்த நேரத்திலே தெரிவித்துக் கொள்கிறேன். ஏனென்றால் நிலத்திற்கு மட்டும் 13,000 கிடைப்பதால், அங்கு கட்டிடத்தையும் கட்டினால், அங்குள்ள நகரசபைக்கும், சர்க்காருடைய முதலீட்டுக்கும் நல்ல வருமானம் கிடைக்கும். மக்களுக்கும் வசதியாக இருக்கும். பார்ப்பதற்கும் அழகாக இருக்கும். இப்படிக் கட்டுவதால் சர்க்காருக்கு வருமானம் கிடைக்கும் என்பதற்கு அறிகுறியாக இந்தத் திட்டத்தை எடுத்துக் கொண்டால், அடுத்தடுத்து இம்மாதிரி பல கட்டிடங்கள் கட்டுவதற்கும் வசதியாக இருக்கும். இது நல்ல வருமானம் வரக்கூடிய திட்டமாகையால், இதை உடனடியாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த நகரத்திலே அணை கட்டும்போது, குடிதண்ணீர் திட்டத் திற்கு பம்ப் செட்டுகள் வைத்திருக்கிறார்கள். அதற்கு அடுத்தாற் போல் டன்னல் ஸ்கீம் வருகிற நேரத்திலே, அங்கே இருக்கக்கூடிய தண்ணீர் தொட்டியானது அடியிலே உடைந்திருக்கிற காரணத்

25th March 1961] [Sri K. S. Ardhanareeswara Gounder]

தால், அந்தத் தொட்டிகள் எல்லாம் விரிசல் விட்டிருப்பதாகத் தெரிகிறது. அதுவும் தவிர, அங்கு ஜனத்தொகை அதிகமாகிக் கொண்டு வந்திருப்பதால், இந்தத் திட்டத்தை எப்படியாவது நல்லமுறையிலே அமைத்து, அங்கிருக்கக்கூடியவர்களுக்கு நல்ல முறையிலே குடிதண்ணீர் வசதி கிடைக்கும்படிச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பல சிறிய கிராமங்களிலேயெல்லாம் பஸ் ஸ்டாண்டுகள் கட்டப்பட்டிருக்கின்றன. குறிப்பாக, இந்த நகரத்திலே கிட்டத்தட்ட 40,000 பேர்கள் வசிக்கிறார்கள். ஆனால் இந்த இடத்திற்கு பஸ் ஸ்டாண்டு என்பதே கிடையாது. நான் இதை எதற்குச் சொல்கிறேன் என்றால், டவுன்ஷிப் கமிட்டி—இது சர்க்காருடைய நேரடியான மேற்பார்வையிலே இருப்பதினாலே, இந்த பஸ் ஸ்டாண்டு விஷயத்தையும் நல்லமுறையிலே விருத்தி செய்ய வேண்டுமென்பதற்காகத்தான். ஆகவே இதையும் உடனடியாகக் கவனித்து, மேட்டூரிலே ஒரு நல்ல பஸ் ஸ்டாண்டு அமைத்துக் கொடுக்குமாறு சர்க்காருடைய கவனத்திற்கு கொண்டு வருகிறேன்.

பக்கத்தில் இருக்கக்கூடிய குளத்தூரில் 15,000 மக்கள் வசிக்கிறார்கள். அதற்கு அருகாமையில் மேட்டூர் அணையிருந்துங்கூட, அந்த மக்களுக்கு குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்காமல் இருப்பது ரொம்ப வருந்தத்தக்கது. உடனடியாக அந்த கிராமத்திற்கு குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்கும்படியாக கேட்டுக் கொள்ளுகிறேன். 10-30 a.m.

அடுத்தபடியாக, இடப்பாடிக்கு குடிதண்ணீர் திட்டம் தயாரிக்கப்பட்டு வேலை நடந்துவருவதாகச் சொல்லப்படுகிறது. ஆனால், வழியிலே இருக்கக்கூடிய கிராமங்களுக்கு (வேஸைடு வில்லேஜஸ்) அதிலிருந்து தண்ணீர் கொடுக்காமல் இருப்பது மிகவும் வருந்தக்கூடிய நிலைமையில் இருக்கிறது. என்னைப் பொறுத்தவரையில் எந்த நகரத்திற்கு தண்ணீர் சப்ளை செய்து கொடுத்தாலும், வழியிலே இருக்கக்கூடிய கிராமங்களுககும் குடிதண்ணீர் சப்ளை செய்தால்தான், அந்தக் கிராம மக்கள் பலன் பெறுவார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குறிப்பாக, திருச்செங்கோட்டில் ஒரு பீப்பாய் தண்ணீர் ரூ. 4 என்று விற்கப்படுகிறது. அங்கு கிணற்றில் தண்ணீர் கிடையாது. பக்கத்தில் இருக்கக்கூடிய கிணறுகளிலும் தண்ணீர் இல்லாமல் அது வரண்ட பிரதேசமாய் இருக்கிறது. திருச்செங்கோட்டிற்கு காவேரியிலிருந்து தண்ணீர் கொடுத்தால், அங்கு இருக்கக்கூடிய மக்களுக்கு குடி தண்ணீர் வசதி நல்ல முறையில் கிடைக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நீண்ட காலமாக சேலம் ஜில்லாவுக்கு அமைச்சர் வரும்போதெல்லாம் பல கிராமங்களில் உள்ள மக்கள் இம்மாதிரி குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று சொல்லிக் கேட்டிருக்கிறார்கள். அதை உடனடியாகச் செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri K. S. Ardhanareeswara Gounder] [25th March 1961

அடுத்தபடியாக, 'நாஷணல் வாட்டர் சப்ளை ஸ்கீம்' ரூரல் வாட்டர் சப்ளை ஸ்கீம்' இவைகளெல்லாம் காலாகாலத்தில் தயாரிக்கப்பட்டு சர்க்கார் அனுமதி வழங்கப்பட்டால்தான், 'பணம் லாப்ஸ்' ஆகாமல், திட்டங்களை நிறைவேற்ற முடியும். தகுந்த நேரத்தில் திட்டங்களுக்கு அனுமதி கொடுக்க வேண்டும். திட்டம் தயார் செய்த பிறகு வருஷக் கடைசியில் சர்க்கார் அனுமதி கொடுக்கிறார்கள். அதனால் பல இடங்களில் வேலை தடங்கல் படுகிறது. அடுத்த ஆண்டில் செய்யக்கூடிய வேலைகளுக்கெல்லாம், இந்த ஆண்டில் நல்ல முறையில் திட்டம் தயாரித்து, மத்திய சர்க்கார் திட்டம் மூலம் நமக்குக் கிடைக்கக்கூடிய பணத்தை நல்ல முறையில் செலவழிக்க ஏற்பாடு செய்யவேண்டும். காலாகாலத்தில் திட்டங்களை தயார் செய்து பூர்த்தி செய்தால்தான், மத்திய சர்க்கார் கொடுக்கும் பணத்தை நாம் நல்ல முறையில் செலவழிக்க முடியும். அதற்கு நல்ல முறையில் திட்டம் தயார் செய்து தயாராக வைத்துக் கொண்டிருக்கவேண்டும். காலதாமதம் ஆவதற்கு முக்கியமான காரணம் என்னவென்றால், தண்ணீரை பரிசோதனை செய்வதற்கு கிண்டிக்கு அனுப்ப வேண்டியிருக்கிறது, அது திரும்பி வருவதற்கு காலதாமதம் ஆகிறது. அதுதான் முக்கிய காரணம் என்று கருதுகிறேன். இம்மாதிரி தண்ணீரை பரிசோதனை செய்வதற்கு இன்னும் பல இடங்களில் பரிசோதனை நிலையங்கள் அமைத்துக் கொடுத்தால் இந்தக் கஷ்டம் நீங்கும் என்று நினைக்கிறேன். அதையும் தவிர மேட்டூரைப் பொறுத்த வரையில் டவுன்ஷிப் கமிட்டியில் அங்கு இருக்கக்கூடிய சட்டசபை அங்கத்தினரை மெம்பராக சேர்த்துக்கொள்ளப்படவில்லை. குற்றாலம் டவுன்ஷிப் கமிட்டியிலும், வேறு டவுன்ஷிப் கமிட்டிகளிலும் அங்கு இருக்கக்கூடிய சட்டசபை அங்கத்தினர்கள் மெம்பர்களாக இருக்கிறார்கள். இதைப்பற்றி அமைச்சர் அவர்களிடத்தில் எடுத்துச் சொல்லியும்கூட, அங்கு இருக்கக்கூடிய சட்டசபை அங்கத்தினரை மேட்டூர் டவுன்ஷிப் கமிட்டியில் மெம்பராக சேர்த்துக்கொள்ளப்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதில் அங்கம் வகிக்கவேண்டுமென்ற ஆசைக்காகச் சொல்லவில்லை. மக்கள் தேவையைப் பூர்த்தி செய்வதற்கும், அங்குள்ள குறைபாடுகளை எடுத்துச் சொல்லுவதற்கும் அங்கு அங்கத்தினராக இருந்தால் தான் சௌகரியமாக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI K. N. PALANISWAMI GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் கொண்டு வந்திருக்கும் மான்யத்தை ஆதரித்து சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். ஒரு ராஜ்யத்தினுடைய வளர்ச்சியை, மக்களுடைய வளர்ச்சியை, நாட்டினுடைய வளர்ச்சியை, பொருளாதார வளர்ச்சியைப் பார்க்கிறபொழுது, நம் நாட்டுக்கு மேல் நாட்டிலிருந்து வருபவர்கள் பார்க்கவேண்டுமென்று சொன்னால், நகரசபைகளைத்தான் முக்கியமாக பார்க்க வேண்டியிருக்கிறது. சென்னை ராஜ்யத்தில் மக்கள் வளர்ச்சி அடைந்திருப்பதை பார்க்கவேண்டுமென்றால், சென்னை நகர

25th March 1961] [Sri K. N. Palaniswami Gounder]

சபையையும் மற்ற நகர சபைகளையும் பார்க்கவேண்டும். ராஜ்யத்தில் நகரசபைகள் நிர்வாகம்தான் முக்கியமாக இருக்கிறது. அப்படியிருந்தும்கூட நகரசபைகள் நிர்வாகத்தை சென்னை அரசாங்கம் கடைநிலையில் வைத்திருப்பது குறித்து நான் வருத்தப் படுகிறேன். மற்ற நிர்வாகங்களைப் போல் ஸ்தல ஸ்தாபனங்களின் நிர்வாகம் அதிக கவனிப்பு இல்லாத முறையில் இருப்பது வருந்தத் தக்க விஷயமாகும்.

முக்கியமாக ஸ்தல ஸ்தாபனங்களில் பொதுமக்கள் பிரதிநிதிகளான சேர்மன்களுக்கு போதிய அதிகாரங்கள் இல்லை. நகர சபைத் தலைவர்களுக்கும், கமிஷனர்களுக்கும் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் இருக்கும் அதிகாரங்களை மாற்றி அமைப்பதற்கு 1958-ல் ஒரு வெள்ளை அறிக்கை சமர்ப்பித்தார்கள். அந்தக் கமிட்டியில் நான் அங்கத்தினராக இருந்திருக்கிறேன். வெள்ளை அறிக்கையில் மூன்று விஷயங்கள் பற்றி சொல்லப்பட்டிருந்தது. ஒன்று, சென்னை கார்ப்பொரேஷன் சட்டத்தை திருத்தி அமைப்பது; இரண்டாவது, நகரசபைகள் சட்டத்தை திருத்தி அமைப்பது; மூன்றாவது, புதியதாக கிராமப் பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து யூனியன்களுக்கும் அதிகாரங்கள் கொடுப்பது. இந்த மூன்று விஷயங்களைப் பற்றி கமிட்டி யோசித்தது. முதலாவதாக, இப்பொழுது பஞ்சாயத்து சட்டம் இயற்றப்பட்டு, அது அமுல் நடத்தப்பட்டு, பஞ்சாயத்துக் கள், பஞ்சாயத்து யூனியன்கள் அமைப்பதற்கு ஏற்பாடாகி விட்டது. கார்ப்பரேஷன் சட்டத்தை திருத்துவது பற்றி கூட ஒரு கமிட்டி போடப்பட்டு பரிசிலனை செய்யப்படுகிறது. நகர சபைகள் சம்பந்தமாக 1945-ம் ஆண்டில் ஸ்ரீ ஸி. எஸ். ரத்னசபாபதி முதலியார் அவர்களின் தலைமையில் ஒரு கமிட்டி நிறுவப்பட்டது. அதுபற்றி 1958-ம் ஆண்டில் சர்க்கார் ஒரு வெள்ளை அறிக்கை சமர்ப்பித்திருக்கிறார்கள். அந்த அறிக்கை ஒரு கமிட்டியின் பரிசீலனைக்கு வைக்கப்பட்டது. அந்தக் கமிட்டியின் சிபார்சுகள் இன்னும் அமுலாக்கப்படுவதற்கு நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அந்தக் கமிட்டியின் தலைவராக இருந்த கனம் நிதி அமைச்சர் அவர்களையும், ஸ்தலஸ்தாபன அமைச்சர் அவர்களையும் இதைக் கவனிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்த ஆண்டிலாவது நகரசபை நிர்வாகத்தைப் பொறுத்தவரையிலும் கமிஷனர்களுக்கும், சேர்மன்களுக்கும் பரஸ்பரம் உள்ள அதிகாரத்தை மாற்றி, பொதுமக்களின் பிரதிநிதியாகிய சேர்மனுக்கு அதிக அதிகாரம் வழங்குவதற்கு வேண்டிய முயற்சிகளை சர்க்கார் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, ரெவின்யூ இலாகாவில் ஒரு கலெக்டர் ஆபீஸில் எல்.டி.ஸி. ஆக இருப்பவர்கூட படிப்படியாக ப்ரமோஷன் செய்யப்பட்டு ஜில்லா கலெக்டராக ஆகிவிடுகிறார், சர்க்கார் காரிய தரிசியாக ஆகிவிடுகிறார். ஆனால், நகரசபைக் கமிஷனர்கள் கமிஷனர்களாகவே இருக்கிறார்கள். மூன்றாவது கிரேடு கமிஷனராக ஆரம்பித்து, கடைசிவரையில் முதல் கிரேடு கமிஷனராக இருந்து கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் வாழ்க்கை பூராவும் கமிஷனராகவே இருக்கிறார்கள். அவர்களுக்கு வேறு உத்தியோக

[Sri K. N. Palaniswami Gounder] [25th March 1961

உயர்வு, சம்பள உயர்வு கொடுக்கப்படாமல் இருக்கிறது. இன்றைய தினம் ராஜ்யத்திலுள்ள கமிஷனர்கள் சிலர் வேலையிலே திறமை இல்லாதவர்களாக இருக்கிறார்கள் என்று சொன்னால், அதற்குக் காரணம் அவர்களுக்கு உத்தியோக உயர்வு கிடைப்பதில்லை. கமிஷனர் என்பது தனிப்பட்ட சர்வீஸாக இருக்கக்கூடாது. எல்லா இலாகாவிலுள்ள சர்வீஸோடு அதுவும் இணைக்கப்பட்டு, மொத்த மாக அவர்களும் 'ப்ரொவின்ஷியல் சர்வீஸோடு' சேர்க்கப்பட வேண்டும். அவர்களையும் 'ப்ரொவின்ஷியல் சர்வீஸோடு' சேர்த்து அமைக்க சர்க்கார் முயற்சி செய்யவேண்டும். கமிஷனர், கமிஷன ராகவே இருக்கக்கூடிய நிலை மாறி, மற்ற இலாகாவிலுள்ள உத்தி யோகஸ்தர்களைப்போல் அவர்களும் பாகுபாடு இல்லாமல் சர்க்கார் இலாகா காரியதரிசியாகவோ அல்லது கலெக்டராகவோ உத்தி யோக உயர்வு பெறுவதற்கு வாய்ப்புகள் ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கார்ப்பரேஷன் கமிஷனராக ஐ.ஸி.எஸ். அதிகாரியையோ அல்லது ஐ.ஏ.எஸ். அதிகாரியையோ நியமிக்கிறார்கள். அது வருத்தப்பட வேண்டிய விஷயம். அவ்வாறு இல்லாமல் ஸீனியர் கமிஷனராக இருக்கிறவர்களுக்கு அந்த உத்தியோகம் வழங்கப்படவேண்டும். 'இன்ஸ்பெக்டர் ஆப் முனிசிபல் கவுன்சில்ஸ் அண்டு லோகல் போர்ட்ஸ்' ஸ்தல ஸ்தாபன கமிஷனர்களை கண்காணிப்பு செய்கிறார் கள். கமிஷனர்கள் நகரசபை நிர்வாகத்தை நன்கு அறிந்தவர்கள். ஸ்தல ஸ்தாபன இன்ஸ்பெக்டராக ஸீனியர் கமிஷனரை நியமிக்க லாம். ரெவின்யூ இலாகாவிலிருந்து நியமனம் செய்வது என்ற முறையில் இல்லாமல், ஸீனியர் கமிஷனரை நியமிக்க சர்க்கார் முயற்சி செய்யவேண்டும்.

ஹெல்த் ஆபீசர்களே கிடைப்பது இல்லை. நகரசபை ஹெல்த் ஆபீசர்கள், சர்க்கார் ஹெல்த் ஆபீசர்கள் என்று தனித்தனியாக இருக்கிறது. சர்க்கார் 'பரொவின்ஷியல் ஸர்வீஸோடு' சேராமல், அவர்களை தனிப்பட்ட முனிசிபல் ஹெல்த் ஆபீசர் சர்வீஸில் வைத்திருக்கிறார்கள். 'ப்ரொவின்ஷியல் ஸர்வீஸில்' இருப்பவர்கள் முனிசிபல் சர்வீசுக்கு வருவதில்லை. எல்லா ஹெல்த் ஆபீசர்களை யும் ஒன்றாக 'ப்ரொவின்ஷியல் ஸர்வீஸில்' சேர்த்து, மற்ற ஹெல்த் ஆபீசர்களும் நகரசபைக்கு போவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். அதேபோல்தான் முனிசிபல் என்ஜினியர்களும். இவர்களை 'ப்ரொவின்ஷியல் ஸர்வீஸோடு' சேர்த்து, இவர்களுக்கும் மற்றவர் களைப்போல் உத்தியோக உயர்வும், சம்பள உயர்வும் கொடுக்க சர்க்கார் முயற்சி செய்யவேண்டும். நகரசபைகளுக்கு ஹெல்த் ஆபீஸரே தேவையில்லை, அவசியமில்லை. 'ஸானிடரி இன்ஸ்பெக் டரே' அதை நிர்வாகம் செய்துகொள்ளலாம். லட்சம் ஜனத் தொகை உள்ள நகரசபைகளுக்கு மட்டும் தனியாக ஹெல்த் ஆபீஸர் நியமிக்கப்பட்டால் போதும். மற்றபடி மூன்று நகர சபைகளுக்கு ஒரு ஹெல்த் ஆபீஸர் நியமிக்கலாம்.

அடுத்தபடியாக, தண்ணீர் திட்டம் 1958-ல் எடுத்துக்கொள்ளப் பட்டு 17 நகரசபைகளில் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. நமது அரசாங்கம், இன்னும் இருக்கும் 60 நகரசபைகளிலும் தண்ணீர் திட்டத்தை எடுத்து நிறைவேற்ற இருக்கிறது. அதுபற்றி அவர்களை நான் பாராட்டுகிறேன். திருப்பூர், கோவை ஆகிய

25th March 1961] [Sri K. N. Palaniswami Gounder]

இடங்களிலும், தண்ணீர் திட்டம் போடப்பட்டிருக்கிறது. அது பற்றி பாராட்டுகிறேன். அதுபோல சாக்கடைத் திட்டத்தையும் ஏற்று எல்லா நகரசபைகளிலும் நிறைவேற்றி வைப்பதற்கு சர்க்கார் முயற்சி செய்யவேண்டும். வைத்திய வசதிகள் செய்து கொடுப்பதில் நகரசபைகள் சர்க்காரால் புறக்கணிக்கப்பட்டிருக்கின்றன. பல நகரசபைகள் வைத்திய வசதியில் பின்தங்கியிருக்கிறது. நகரசபைகளுக்கு வேண்டிய சுகாதார வைத்திய வசதிகளை செய்துகொடுக்க சர்க்கார் முன்வரவேண்டும். திருப்பூரைப் பொறுத்தவரை, அங்குள்ள ஆஸ்பத்திரிக்குப் பக்கத்திலேயே சுகாதார நிலையங்கள் நிறுவ முயற்சி எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, சபாநாயகர் அவர்களின் பர்மிஷனோடு ஒரு வார்த்தை மட்டும் சொல்லி விடுகிறேன். நகரங்களில் காலி இடங்கள் இருக்கின்றன. அங்கே வீடுகள் கட்ட ஏற்பாடுகள் செய்யவேண்டும். கேரளா ராஜ்யத்திலே போலச் செய்யவேண்டும். வீடு கட்டுவதில், லட்ச ரூபாய்வரை கமிஷனருக்கும், சாதாரண குடிசைகளானால் கீழ்த்தர உத்தியோகஸ்தர்களுக்கும் அதிகாரம் அளித்து நல்ல முறையிலே செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதிக நேரம் இல்லாததால், இந்த மானியத்தை முழுமனதோடு ஆதரித்து மறுபடியும், பேச ஒரு சந்தர்ப்பம் கொடுப்பார் என்ற நம்பிக்கையோ), என் உரையை முடிக்கிறேன்.

* **SRI G. ANNAMALAI MUTHURAJA:** சட்ட மன்ற உதவித் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மானியத்தை ஆதரித்து ஒருசில கருத்துக் களை சொல்ல விரும்புகிறேன். திருச்சி டவுனில் 1955-ம் வருஷத்தில், முதல் அமைச்சர் திருச்சிக்கு வந்தபோது, முனிசிபல் ஆபீஸ் கட்டிடத்திற்காக அஸ்திவாரக் கல் நாட்டினார்கள். ஆறு வருஷகாலமாக அந்த ஆபீஸ் கட்டிடம் இன்னும் ஆரம்பிக்கப்படவில்லை. என்ன காரணம் என்றால், அந்தப் பேப்பரை மதராஸுக்கு சிப் என்ஜினியருக்கு அனுப்பியிருக்கிறோம் என்று அங்கே சொல்லுகிறார்கள். இன்னும் அது திரும்பி வரவில்லை. காலதாமதம் இருக்கிறது. அந்த அஸ்திவாரக் கல்லை எடுத்து விட்டாலும் பரவாயில்லை. இம்மாதிரி அஸ்திவாரக் கல் போட்ட பிறகும் கட்டிடம் கட்டாமல் தாமதம் செய்வதால் பொது ஜனங்கள் வருத்தப்படுகிறார்கள். மேலும் வியாபாரிகள் வேறு அங்கே கடைகள் வைக்க இடம் வேண்டுமென்று கேட்பதாகத் தெரிகிறது. ஆகையினால், ஆபீஸுக்கு அந்த இடம் சரியில்லை, மாற்றியமைக்க வேறு இடம் செலக்ஷன் பண்ணி வைத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. அப்படியிருந்தால் அந்த இடத்தில் போட்ட பௌண்டேஷன் கல்லையாவது எடுத்துக் கொண்டுபோய், செலக்ட் பண்ணியிருக்கும் இடத்தில் நட்டுவிட்டால் நலமாக இருக்கும். ஆறு வருஷமாக பௌண்டேஷன் கல்லையும் நட்டு வைத்துவிட்டு, கட்டிடம் இன்னும் கட்டவில்லையென்றால் அது அவ்வளவு நன்றாக இல்லை. அதுவும் முதல் அமைச்சர் அவர்கள் கல்நாட்டிவிட்டு இப்படியிருந்தால் அது கேவலமாக இருக்கிறது. அதை அமைச்சரவர்கள் கவனிக்க வேண்டும். அதற்கு சீக்கிர

[Sri G. Annamalai Muthuraja] [25th March 1961

மாக கட்டிடம் கட்டாவிட்டாலும், வேறு இடம் செலக்ட் பண்ணி யிருந்தால், அந்த இடத்திலாவது சீக்கிரமாக வேலை துவங்க வேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது அந்த முனிசிபல் ஆபீஸ் ஆஸ்பத்திரிக்குப் பக்கத்தில் இருக்கிறது. அந்த முனிசிபல் ஆஸ்பத்திரிக்கு இவர்கள் வாடகை செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆஸ்பத்திரிக்கு அதிக இடம் வேண்டுமென்று அவர்களும் நோட்டீஸ் கொடுத்திருக் கிறார்கள். அந்த முனிசிபாலிட்டியும் சிலவற்றைப்போல் பணம் இல்லாத ஸ்தாபனம் இல்லை. அதற்கு 45 லட்ச ரூபாய் வருமானம் வருகிறது. அது ஒரு ஃபர்ஸ்ட் க்ரேட் முனிசிபாலிடி. அப்படி, வேண்டிய வருமானம் வந்தாலும், அவர்கள் மாதம் 1,500 ரூபாய் வாடகை கொடுக்கும் நிலையில்தான் இருக்கிறார்கள். 45 லட்ச ரூபாய் வருமானம் வந்தும், கவர்ன்மெண்டிலிருந்து கடன் வாங்கும் நிலையிலும் இல்லை. அப்படியிருந்தும் அவர்கள் அநாவசியமாக மாதம் 1,500 ரூபாய் வாடகை கொடுத்துக் கொண்டு இருக்கிறார்கள். ஆகவே சீக்கிரமாக அந்த முனிசிபாலிடிக்கு ஒரு கட்டிடத்தைச் சீக்கிரமாக கட்டிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளு கிறேன்.

முனிசிபாலிட்டியானது இவ்வளவு பெரியதாக இருந்தாலும் அங்கே ஒரு செமன்ட் ரோடு கிடையாது. சாதாரணமான சின்ன முனிசிபாலிட்டியான ஸ்ரீரங்கத்தில்கூட செமன்ட் ரோடு போட்டி ருக்கிறார்கள். ஆனால் இவ்வளவு பெரிய முனிசிபாலிட்டி, திருச்சி ஜங்ஷனிலிருந்து காவேரிப் பாலம் வரை நாலு மைல் அளவுக்கு இருக்கிறது. பெரிய உத்தியோகஸ்தர்களும், ப்ரெஸிடெண்ட் ராஜேந்திர ப்ரஸாத்தும் வருகிறார்கள். அவர்கள் வந்தாலும் போனாலும் அந்த ரோடுகள் அப்படியேதான் இருக்கின்றன. எந்த விதமான மாறுதலும் கிடையாது. ஆகவே ஜங்ஷனிலிருந்து காவேரிப்பாலம் வரை செமன்ட் ரோடு போடவேண்டும் என்பதை அமைச்சருக்கு ஞாபகமூட்ட விரும்புகிறேன்.

அங்கே உள்ள முக்கியமான நதி காவேரி ஆறு. அதிலிருந்து தான் டவுனுக்கு தண்ணீர் சப்ளை செய்கிறார்கள். அப்படியிருந்தும், திருச்சியிலுள்ள சாக்கடைத் தண்ணீரெல்லாம், அந்த ஆற்றில் தான் கொண்டுபோய் விடுகிறார்கள். காவேரி ஒரு முக்கியமான புண்ணிய நதி. அங்கு வரும் யாத்திரிகர்கள் அந்த ஆற்றில் ஸ்நானம் செய்து விட்டுத்தான், திருவானைக்கோவில், ஸ்ரீரங்கம் முதலிய கோவில்களுக்குப் போகிறார்கள். அப்படியிருக்க இந்த சாக்கடைத் தண்ணீரை அந்த ஆற்றில் கொண்டு விடுவது ரொம்ப வருந்தத்தக்க விஷயம். அந்த ஆற்றில் இம்மாதிரி மோச மான தண்ணீரைக் கொண்டுவிடுவதால் வரும் பாவ புண்ணியம் யாரைச் சேரும் என்று நான் சொல்லத் தேவையில்லை. இதை அமைச்சரவர்கள் கவனிக்கவேண்டும்.

கனம் அங்கத்தினர் திரு. அர்த்தநாரீஸ்வர கௌண்டர் சொல் வது போல, மேட்டூர் பக்கத்தில் இருந்தும் தண்ணீர் இல்லை என்று சொல்வது போல், இங்கே காவேரி, கொள்ளிடம் பக்கத்தில் இருந்தும், குடிதண்ணீர் சரிவர இல்லை. இப்பொழுது மதுரை

25th March 1961] [Sri G. Annamalai Muthuraja]

யிலிருந்து ஒரு என்ஜினியர் வந்திருக்கிறார்கள். அவர்கள் எடுத்த நடவடிக்கையால், இப்பொழுது 4 மணி நேரம் தண்ணீர் வருகிறது. அந்தத் தண்ணீரை 12 மணிவரையிலாவது விட ஏற்பாடு செய்ய வேண்டும். இல்லாவிட்டால் அந்த என்ஜினியரையாவது அங்கிருந்து டிரான்ஸ்பர் ஆகாமல் பார்த்துக் கொண்டால் நலமாக இருக்கும். ஆகையால் அதைக் கவனிக்க வேண்டும்.

* SRI K. ANBAZHAGAN : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, உள்ளாட்சித் துறை உதவி நிதி கோரிக்கைகளை ஒட்டி கொண்டுவந்திருக்கும் மான்யத்தின் பேரில் சில கருத்துக்களைச் சொல்ல வாய்ப்பு பெற்றதற்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். 10-40 a.m. இந்த உள்ளாட்சித் துறை ஓர் அமைச்சர் பேரில் நிர்வகிக்கப் பட்டாலும், தனியாக அவரே முழுப் பொறுப்பும் உடையவராக இல்லாமல், பல்வேறு அமைச்சர்களோடு இணைந்தே பொறுப்பு வகிக்க நேருவது உண்மையாகவே வருந்தத் தக்கது. அமைச்சர் அவர்கள் மானியத்தை முன் மொழிகிறபோது, "இதில் எனது சகாக்கள் கனம் ரெவின்யூ அமைச்சரவர்களும், கனம் தொழிலமைச்சர் அவர்களும் சம்மந்தப்பட்டுள்ள சில திட்டங்களுக்காக வேண்டியுள்ள செலவினங்களும் அடங்கும்" என்று குறிப்பிட்டுள்ளார்கள். மற்ற அமைச்சர்கள் பொறுப்போடுதான் இதை நிர்வகிக்க வேண்டியிருக்கிறது. இந்தத் துறையில் ரூபாய் இரண்டு கோடியே நாற்பது லட்சம் அனுமதிக்கப்பட்ட போதிலும் இதன் செலவினங்களுக்கு உள்ளாட்சி அமைச்சரே முழுப் பொறுப்பும் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. குடிநீர் திட்டத்திற்கு உதவி வழங்கவேண்டுமானால், ரெவின்யூ அமைச்சர் ஆதரவு பெற வேண்டிய அளவுக்கும், ரூரல் டெவலப்மெண்ட், சமுதாயநலத் திட்டம் போன்ற வேறு துறை வேலைகளுக்கு முதல் அமைச்சர் அனுமதி தேவைப்படும் அளவுக்கும் உள்ள முறைதான் இருக்கிறது. உள்ளாட்சி முறையின் சிறப்பைத் தெரிவிக்கிறவர்கள், அதில்தான் சுயராஜ்யம் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள்; குடி ஆட்சி, மக்களாட்சி பெருக வேண்டுமானால், முழுப் பொறுப்பும் ஏற்றுக் கொள்ளக்கூடிய தனி இலாகாவாக உள்ளாட்சித் துறையை அமைக்க வேண்டும். அமைச்சர்களில் ஒருவரே பொறுப்பு ஏற்றுக் கொள்ளும் முறையிலே வழிவகை செய்வதில் கவனம் செலுத்தப்படவேண்டும் என்று விரும்புகிறேன்.

சேரி ஒழிப்புத் திட்டமானது—சேரி ஒழிப்புத் திட்டம் என்பதே கருத்தளவில் சேரி சீரமைப்புத் திட்டமாக மாறவேண்டும் என்று முன்பே கூறியிருக்கிறேன். சேரி சீரமைப்புத் திட்டம் தேவைப் படும் இடங்களில், அது தனியாக அன்றி, அது புதிய வீடுகள் கட்டும் திட்டத்தோடு இணைக்கப்படலாம். சேரி சீரமைப்புக்கு வேண்டுமானாலும் ஒரு தனி இலாகாவை அமைத்துக்கொள்ள வேண்டும். புதிய வீடு கட்டும் போர்டு அமைப்பை ஏற்படுத்த இருப்பவர்கள், அடுத்த ஆண்டில் அதை ஏற்படுத்துவார்கள் என்றால், அதற்காக தனியாகத் தொகை கேட்கும்போது, மாநிலம் முழுதுக்கும் வீடு கட்டும் திட்டத்திற்கு ஒரு தனி மானியமாக ஒதுக்குமாறு கேட்கவேண்டும் என்று கூற விரும்புகிறேன்.

[Sri K. Anbazhagan] [25th March 1961

இதற்கு முன்னாலே நிறைவேற்றப்பட்ட சேரி சீர்திருத்தத்தைப் பற்றி காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்களே சென்னைமா நகராட்சி மன்றத்தின்மீது குறைகளைத் தெரிவித்து கண்டித் தார்கள். "இவ்வளவு வீடுகள் கட்டுவதற்கு அனுமதித்தோம், ஆனால் இவ்வளவு வீடுகள்தான் கட்டியிருக்கிறார்கள்" என்று குறை பட்டுக்கொண்டார்கள். அவர்களுக்குக் குறிப்பாகத் தெரிவிக்க விரும்புகிறேன். வீடு கட்டுகிற திட்டத்தின்கீழ் இந்த அரசாங்கம் ஒதுக்கிய தொகையில் குறைவாகத்தான் செலவழித்திருக்கிறார்கள் என்று சொன்னாலும் அந்தத் திட்டம் 1958-ம் ஆண்டில்தான் ஐந்தாண்டுத் திட்டத்தின் ஓர் ஆண்டு கழித்துத்தான் ஆரம்ப மாயிற்று. திட்டம் ஆரம்பித்த முதலில் ஒன்றரை ஆண்டுகள் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள்தான் சென்னை நகராண்மைக் கழக நிர்வாகப் பொறுப்பில் இருந்தார்கள். இந்தச் சேரி ஒழிப்புத் திட்டத்திற்காக அரசாங்கத்தினிடம் இருந்து பெறப்பட்ட தொகை பற்றிய ஒரு குறிப்பு இங்கே தரப்பட்டிருக்கிறது. 1956-57-ம் வருஷத்தில் அரசாங்கத்திலிருந்து பெறப்பட்டது ஒரு லட்சம் தான். 1957-58-ல் 12 லட்சம்தான். 1958-59-ல் தான் 28 லட்சம் பெறப்பட்டிருக்கிறது. 1959-60-ம் ஆண்டில் பெறப்பட்டிருப்பது 30 லட்சம். 1960-61-ம் ஆண்டிற்காக ஒதுக்கப்பட்டிருப்பது இன்னும் அதிகம். ஆக, இதிலே கடைசி இரண்டு ஆண்டுகளாகத்தான் திராவிட முன்னேற்றக் கழகம் சென்னைமா நகராட்சி மன்றத்தின் நிர்வாகப் பொறுப்பில் இருந்துகொண்டிருக்கிறது. இவர்கள் பதவிக்கு வந்த பிற்பாடு தங்கள் கடமையைச் செவ்வையாக நிறைவேற்றி வருகிறார்கள் என்பதற்கு இந்தப் புள்ளி விவரங்கள் ஓரளவுக்குத் தெளிவாக எடுத்துக்காட்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆகவே, ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் திராவிட முன்னேற்றக் கழகக் கட்சியைத் தாக்கவேண்டும் என் பதற்காக இப்படி பொறுப்பற்ற முறையில் பேசுவதில் அர்த்த மில்லை. அந்தக் குறைக்கு இடமும் இல்லையென்று தாழ்மையோடு வலியுறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இனிமேல் புதிய வீடு கட்டும் திட்டங்களை மேற்கொள்வதற்கு தனியாக ஒரு போர்டு—ஒரு குழு—நியமிக்கப்பட்டிருப்பதால் அது தன் கடமைகளைச் சரிவர நிறைவேற்றும் என்றும் எதிர்பார்க்கிறேன்.

அதேபோல கட்டப்பட்ட குடிசைகள்—வீடுகள்பற்றிக் கொடுக் கப்பட்டிருக்கிற புள்ளிவிவரங்களைப் பார்த்தாலும்கூட இதே கால அளவில் இந்த ஒரே வேலையை மேற்கொண்டுள்ள சிட்டி இம்ப்ரூவ் மென்ட் டிரஸ்டு எந்த அளவுக்கு கட்டிக் கொடுத்திருக்கிறார்களோ ஏறத்தாழ அந்த அளவுக்கு இவர்களும் கட்டியிருக்கிறார்கள் என்பது நன்றாகத் தெரியும். வீடுகளும் கட்டியிருக்கிறார்கள், மனை களும் ஒதுக்கியிருக்கிறார்கள். எனவே எந்தவகையிலும் நகராண்மைக் கழகத்தின்மீது தனிப்பட்ட குற்றங்கள் சாட்டு வதற்குக் காரணம் இல்லையென்று தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்து சென்னை நகரசபைக்கு ரோடுகள் சீரமைப்புக்கு பல ஆண்டு காலமாகக் கேட்கப்பட்டு வந்த உதவித் தொகையும், மானியத் தொகையும் தரப்படாமல் இருந்து வந்தது. பொது மக்கள் கூக்குரல் இட்டதன் காரணமாக 1959-60-ம் ஆண்டில் பத்து

25th March 1961] [Sri K. Anbazhagan]

லட்சம் ரூபாய் உதவித் தொகை அளிக்கப்பட்டது. 1960-61-ல் பதினைந்து லட்சம் ரூபாய் உதவித் தொகை தரப்படுகிறது. 1961-62-க்கு இருபத்தொன்பது லட்சம் ரூபாய் உதவித் தொகை தருவதற்கு இசைந்து இருக்கிறார்கள். மானியமாகத் தரப்படும் இந்தத் தொகைக்கு ஈடான தொகை கடனாகவும் தரப்படுகிறது. ஆனாலும் மாநகராட்சி மன்றம் விரும்புகிற கடமைகளை நிறைவேற்றித் தருவதற்கு, ஆற்றவேண்டிய பொறுப்புகளை ஆற்றுவதற்கு சென்னை நகராண்மைக் கழகத்தின் பல்வேறு கடமைகளுக்கு இந்த உதவித் தொகைகள் அளிக்கப்படவில்லை. இப்போதும் 1961-62-ல் நகராண்மைக் கழகத்திற்கு வழங்கப்பட்டிருக்கிற 29 லட்சம் கடன் தொகையும், 29 லட்சம் மானியத் தொகையும் குறிப்பிட்ட இரண்டு சாலைகளின் பராமரிப்புக்காக—அதாவது மவுண்டு ரோடு, பூவிருந்தமல்லி நெடுஞ்சாலை ஆகிய இரண்டு சாலைகளின் பராமரிப்புக்காகவும், மற்ற பஸ் போக்குவரத்து சாலைகளுக்கும் என்று ஒதுக்கியிருக்கிறார்கள். மற்ற பஸ் போக்குவரத்து சாலைகள் எல்லாவற்றுக்குமாகச் சேர்த்து 25 லட்சம் ரூபாய் மட்டுமே ஒதுக்கியிருக்கிறார்கள். ஆனால் இந்தச் சாலைகள் எல்லாம் சென்னை சர்க்காருடைய பஸ் போக்குவரத்தினால் பெரும் அளவுக்குப் பாதிக்கப்பட்டிருக்கின்றன என்பதை இதற்கு முன்னால் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் பலமுறை தெரிவித்திருக்கிறார்கள். என்றாலும் இதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிற தொகை 25 லட்சம்தான். உண்மையிலேயே இந்த ரோடுகள் எல்லாம் செம்மையாகப் பராமரிக்கப்பட்டு பாதுகாக்கப்பட வேண்டுமென்றால் 25 லட்சம் ரூபாய் கடனாகவும், 25 லட்சம் ரூபாய் மானியமாகவும் ஒதுக்கித் தரவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

இனி அடுத்து கூற விரும்புவது திருவொற்றியூர் நெடுஞ்சாலை, மேம்பாலம், சென்னை ஹைகோர்ட்டுக்கு அருகில் கட்டவிருக்கும் மேம்பாலம்—அல்லது கீழ்ப்பாலம் இவைகளுக்கு 2½ லட்சம் ரூபாய் தொகை ஒதுக்கியிருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு மேம்பாலங்களையும் எவ்வளவுக்கு எவ்வளவு துரிதமாக நிறைவேற்றிக் கொடுக்கிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவுதான் சென்னை நகர் போக்குவரத்து துரிதமாக வளர்ச்சி அடையமுடியும். இன்றையதினம் இந்த இரண்டு மேம்பாலங்களும் இல்லாத காரணத்தினால் போக்குவரத்து பெரும் அளவுக்குத் தடைப்படுகிறது. இந்த இரண்டு பாலங்களும் மிக விரைவாக எடுத்துக்கொள்ளப்பட வேண்டும் என்பதோடு கோடம்பாக்கம் மேம்பாலத்திற்கும் உடனடியாக அடையாளத் தொகையாவது ஒதுக்குவதற்கு அரசாங்கம் முன்வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து குடிநீர் வழங்கும் திட்டத்தின்கீழ் மற்ற ஆட்சி மன்றங்களுக்கும் தொகை ஒதுக்கியிருக்கிறார்கள். அதைப் பொது வகையில் வரவேற்கிறேன். நீர்வழங்கும் திட்டத்திற்கு இன்னும் அதிகப்படியான தொகை ஒதுக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்வேன். குறிப்பாக சேலம் மாவட்டத்தில் ராசிபுரத்திற்கும்,

தென்னுற்காடு மாவட்டத்தில் விழுப்புரம் நகரத்திற்கும் குடி தண்ணீர் வசதி செய்து தரப்படவேண்டுமென்று கடந்த எட்டாண்டு, பத்தாண்டு காலமாகக் கேட்டு வருகிருர்கள். அவர்களுக்குப் போதுமான தொகை ஒதுக்கப்பட்டு அந்த வேலைகள் தொடங்கப்படவில்லை. அதேபோல விருத்தாசலம் நகரத்தைப் பொறுத்தவரையில் அது ஒரு மேஜர் பஞ்சாயத்தாக இயங்கி வருகிறது. பக்கத்தில் நெய்வேலி வேலை திட்டத்தால் விருத்தாசலத்திலும் மக்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருகிறது. அங்கே குடிதண்ணீர் வழங்குவதற்குச் சரியானதொரு திட்டம் நிறைவேற்றப்பட்டாக வேண்டும். அவர்கள் லட்சம் ரூபாய்க்கு ஒரு திட்டம் வகுத்திருக்கிருர்கள். ஆனுல் அவர்களுக்கு எந்த மானியத் தொகையும் அளிக்கப்படவில்லை. ஆனுல் ஒரு பகுதி கடன் தருவதற்குத்தான் இசைந்திருக்கிருர்கள். அந்தத் திட்டத்திற்கு மானியம் வழங்கப்படாவிட்டாலும் டிரெயினேஜ் ஸ்கீம், வடிகால் திட்டத்தைப் பொறுத்த வரையிலாவது அதை ஏற்று அதற்கு மானியம் வழங்கப்படவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

கடைசியாக நான் தெரிவிக்க விரும்புவது உள்ளாட்சி மன்ற பகுதி சாலைகள், மாவட்ட சாலைகள் இவற்றையெல்லாம் நிறைவேற்றுவதற்கு ஹைவேஸ் இலாகாவினர் பொறுப்பேற்று இருப்பதை நான் வரவேற்கிறேன். ஆனுல் உள்ளாட்சி மன்ற நிர்வாகங்களில் தலையிடவேண்டிய நிலை ஏற்படுகிற காரணத்தினுல் தனியாகவே ஒரு இலாகாவாக அதை அமைத்து கடமைகளைச் சரிவர செய்வதற்கு வழி காணவேண்டும். அதற்கேற்ற நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை நான் முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* **SRI M. R. KANDASWAMI MUDALIYAR**: உதவி சபா நாயகர் அவர்களே, இந்தச் சபைமுன் வந்திருக்கிற மானியத்தை ஆதரித்து சில விஷயங்களைப் பேச முன் வந்திருக்கிறேன். நம்முடைய ராஜ்யத்திலே ஸ்தல ஸ்தாபன நிர்வாகங்கள் நன்ருக நடைபெறுவதுடன் குடிதண்ணீர் வசதி, கல்வி வசதி, ரோடு வசதி இவைகள் எல்லாம், நம்முடைய நிதி நிலைமைக்கு ஏற்ப அபிவிருத்தி அடைந்துகொண்டு வருவதை, சீரும் சிறப்பும் பெற்று வருவதைக் கண்டு நான் மகிழ்ச்சியும், பெருமையும் அடைகிறேன். இன்னும் சிற்சில விஷயங்களை, உடனடியாகக் கவனிக்க வேண்டிய விஷயங்களை ஞாபகப்படுத்திச் சொல்ல நினைக்கிறேன்.

நம்முடைய ராஜ்யத்திலே ஆங்காங்கு பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்படுத்தப்பட்டு, இந்த யூனியன்கள் வசத்திலே ஜில்லா போர்டு ரோடுகள் எல்லாம் ஒப்படைக்கப்பட்டு வருகின்ற நிலைமை ஏற்பட்டிருப்பதனுல் அந்தப் பஞ்சாயத்து யூனியன்களுக்கு இந்த ரோடு பராமரிப்புக்காகப் பிரித்துக்கொடுக்க 90 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதை வரவேற்கிறேன். ஆனுல் அநேகமாக இந்தத் தொகை போதாது என்று கருதுகிறேன். மற்ற எல்லா இடங்களிலும் ரோடுகள் தேவைப்படுகிற காரணத்தினுல் யூனியன்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிற இந்தத் தொகை மிகச் சொற்ப

25th March 1961] [Sri M. R. Kandaswamy Mudaliyar]

மானதாக இருக்கும். இத்தொகையை இன்னும் அதிகப்படுத்த வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். அதோடு எந்த எந்த ஜில்லா மிகவும் பிற்பட்டதாக இருக்கிறதோ அவற்றை யெல்லாம் நன்கு பரிசீலனை செய்து ரோடுபோடும் முழுப்பொறுப் பையும் சர்க்காரே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சேலம் முனிசிபாலிட்டி ரோடுகள் எல்லாம் மிகவும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. சேர்மென் அவர் களால் நிவர்த்திபண்ண முடியாத குறையாக இது இருக்கிறது. அவர்களுக்குப் போதுமான பணம் இல்லை. சர்க்கார் பஸ்கள் போக்குவரத்து காரணமாகத்தான் இந்த ரோடுகள் எல்லாம் மோச மடைந்திருக்கின்றன. அரசாங்கம் தனியாக இதற்கென்று பணம் கொடுத்தால்தான் இந்த ரோடுகளைப் பராமரிக்க முடியும், இல்லா விட்டால் எங்கள் வருவாயைக்கொண்டு ஒன்றும் செய்ய முடியாது என்று அவர்கள் சொல்கிறார்கள். ஆகவே, சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன், கடமைகவாவது இந்த ரோடுகளைப் பராமரிப்பதற்கு உடனடியாக அவர்களுக்குப் பண உதவி செய்யவேண்டும்.

சேலம் ஜில்லா குடிதண்ணீர் வசதி விஷயத்தில் மிகவும் பின் தங்கிய ஜில்லா என்பது எல்லா அமைச்சர்களுக்கும் தெரியும், இங்குள்ள நண்பர்கள் பலருக்கும் அது தெரியும். நீர்ப்பாசன வசதி யற்ற ஜில்லா, சேலம் ஜில்லா. நாங்கள் நான்கு வருடங்களாக குடி தண்ணீருக்கு படும் கஷ்டம் சொல்லி முடியாது. நகரத்தில் மட்டு மல்ல, கிராமங்களில்கூட. என் தொகுதியில் பல கிராமங்களில் இப்பொழுதே ஒரு குடம் தண்ணீர் ஒரு அணா என்று வாங்கி குடித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே, அகில இந்திய குடி தண்ணீர் திட்டத்தின்கீழ் அங்குள்ள கிராமங்களுக்கு, எல்லா இடங்களிலும் கிணறுகளை ஆழப்படுத்தி குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்கக்கூடிய முறையில் டீரில் பவரைக்கொண்டு கிணறுகளை ஆழப்படுத்தி குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்து கொடுத்து, ஆபத்தான நிலை அங்கு ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டும். ராசிபுரம், திருச்சங்கோடு இவைகளில் ராசிபுரம் மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது. இந்தத் திட்டத்தை அங்கு அமுல் நடத்த அரசாங்கம் ஒப்புக்கொண்டிருக்கிறது. சேலத்துக்கு மேட்டூரிலிருந்து ஒரு அடிஷனல் பைப்ஸ் கொண்டு வந்து போட்டபின் ராசிபுரத்திற்கு பணமரத்துப்பட்டி தண்ணீரைக் கொடுக்க முடிவு செய்திருக்கிறார்கள். இடையில் ஏதாவது ஒரு கிணறு வெட்டி நகரவாசிகளுக்கு குடிதண்ணீர் சப்ளை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின், சந்தைகளில் பல யிடங்களிலும் தண்ணீர் வசதியில்லை. குடிப்பதற்கு தண்ணீர் இல்லை. ஆயிரக்கணக்கான மக்கள் சந்தைக்கு வரும்போது, அது வும் வெய்யிலில் வரும்போது அவர்கள் அத்தனை பேர்களுக்கும் தண்ணீர் எந்த இடத்திலும் யாரும் கொடுக்க முடியாது. ஆகவே, சந்தைகளில் குடிதண்ணீர் வசதி (பெல்) ஏற்படுத்திக்கொடுக்க வேண்டிய வசதி செய்யவேண்டும். அடுத்தபடியாக, ஆடு, மாடு, 11-00 a.m.

[Sri M. R. Kandaswamy Mudaliyar] [25th March 1961

அடிக்கும் தொட்டிகளுக்கு கட்டிடம் இல்லே. திறந்த வெளிகளில் தான் ஆபாசமான முறையில் வைத்துக்கொண்டிருக்கிருர்கள். ஆகவே, ஆடு மாடுகள் அடிக்க தொட்டிகள் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின் மெயின் ரோடுகளோடு கிராம ரோடுகளே இணேக்க திட்டமிருக்கிறது. கிராம ரோடுகளே சீர்படுத்திக் கொடுக்கவேண்டும். அவைகளே மெயின் ரோடுகளோடு இணேக்க திட்டமிருக்கிறது. அதைச் சீக்கிரம் செய்து தர வேண்டும். ஒவ்வொரு பஞ்சாயத்திலும் சாக்கடை வசதி செய்து கொடுத்து, சாக்கடைகள் கட்டி கிராமங்களே சுகாதாரமான முறையில் வைத்துக்கொள்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The hon. Member Srimathi Anandanayaki may now speak. I allot three minutes for the hon. Member.

SRIMATHI T. N. ANANDANAYAKI : For an hon. Member to express his/her views, at least five minutes are required. If it is less than five minutes, I am prepared to forego my chance.

DEPUTY SPEAKER : All right. The hon. Member may take five minutes.

* SRIMATHI T. N. ANANDANAYAKI : இந்த மான்யக் கோரிக்கையில் அம்மையார் அவர்கள் நகரசபைக்கும், நகராட்சி மன்றங்களுக்கும் என்னென்ன துறைகளில் எப்படி எப்படி தொகை கொடுக்கப்போகிருர்கள் என்பதுபற்றி விரிவாக எடுத்துக் கூறியிருக்கிருர்கள். முதல் பக்கத்தில் பார்க்கும்போது பல அமைச்சர்களின் அதிகாரத்தில் இருக்கிற பலவற்றையும் ஒன்ருக இணேக்கப்பட்டிருக்கிறது. எப்பொழுதுமே ஒன்ருேடொன்று இணேக்கப்பட்டிருந்தால் டிலே ஏற்படத்தான் செய்யும். ஆகவே, ஸ்தல அபிவிருத்திக்கு தேவையானவற்றையெல்லாம் ஒரே அமைச்சரின் தலைமையில் வைத்து நடத்துவதுதான் வேலேகள் நன்கு துரிதமாக நடப்பதற்கு உதவியாகயிருக்கும். அதில்லாமல் வாட்டர் சப்ளே, ஹைவேஸ், ரோட்ஸ், ட்ரெயினேஜ், என்று பிரித்து வைத்திருந்தால் காலதாமதமின்றி வேலேகள் நடைபெறுவது கஷ்டம். டிப்பார்ட்மெண்ட்களுக்கு இடையில்தான் பைல்கள் ஓடிக்கொண்டிருக்க டயம் இருக்கும். ஆகவே, இந்த முறையில் சுருங்கச் செய்து ஒரளவு தொந்தரவுகள் இல்லாமல் செய்ய வேண்டும். நகராட்சி மன்றத்திற்கு இந்த ஆண்டு நாம் அதிகப்படி தொகை கொடுக்கிருேம். காங்கிரஸ் கட்சி நகராட்சி நடத்திய போது இவ்வளவு மான்யத் தொகையை இந்த அரசாங்கம் கொடுத்ததில்லே. இன்று நகராட்சியை நரகாட்சியாக நடத்துகிற கட்சியின் கையில் எக்கச்சக்கமாக பல லட்சக்கணக்கான ரூபாய்களே நாம் கொடுத்து அங்கு வேலேகள் சரிவர நடக்கிறதா என்று பார்த்தால் உண்மையில் அது வேதனேயைத்தான் அளிக்கிறது. முப்பது லட்சம் கொடுத்தும் இன்னும் ரோடுகள் சரிவர செப்பனிடப்படவில்லே. இன்னும் கூடுதலாக கொடுக்கப் போகிருேம். ஆகவே, கொடுக்கப்படும் தொகைக்கு வேலேகள் நன்கு சரியாக

25th March 1961] [Srimathi T. N. Anandanayaki]

நடக்கிறதா என்று பார்க்க வேண்டுமென்றால், அதற்கு என்று ஒரு தனி கமிட்டி அமைப்பது மிகமிக அவசியம். நகராட்சி கையில் ஒப்படைக்கிற இந்தப் பணம் **Works Committee, Taxation and Finance Committee** இவைகள் கொடுக்கப்பட்ட தொகையை சரிவர செலவு செய்கிறார்களா என்று பார்க்கவேண்டும். அவர்களுக்கு தொகை ஒதுக்கலாம், ஆனால் ஒதுக்கப்படும் தொகை ஒழுங்காகப் பயன்படுத்தப்படுகிறதா என்பதை கண்காணிப்பது அவசியம். இவ்வளவு பெரும் தொகைகள் கொடுக்கும்போது அவைகள் சரிவர செலவு செய்யப்படுகிறதா என்று பார்க்க ஒரு கமிட்டி, அரசாங்கப் பிரதிநிதி, டிராபிக் டிப்பார்ட்மெண்டின் ஒரு பிரதிநிதி, கார்ப்பரேஷனிலிருந்து சில பிரதிநிதிகள் இவர்களைக் கொண்ட ஒரு கமிட்டியமைத்து இந்தத் தொகைகளை சரிவர செலவு செய்கிறார்களா என்று பார்க்கவேண்டும். தற்போது சில ரோடுகளில் வேலை நடந்திருக்கிறதென்றால் ராணி அவர்கள் வராவிட்டால் இந்த வேலைகள்கூட நடந்திருக்காது. நல்ல வேளை, ராணி வந்தார்கள். ரோடுகளை நன்கு பராமரிக்க எப்பொழுது ராணியார் வருவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. ஆகவே, கொடுக்கப்படும் பணம் ஒழுங்காகச் செலவழிக்கப்படுகிறதா என்று கண்காணிக்க வேண்டியது அவசியம். பின், வடிகால்பற்றி ஒரு வார்த்தை. நகரத்தில் உள்ளவைகளுக்கு, அவைகளின் உறிஞ்சும் சக்தி போய்விட்டது. பழையதை வைத்துக்கொண்டு நடத்தப்படுகிறது, மழை பெய்தால் ஆங்காங்கு குளங்கள், குட்டைகள் ஏற்பட்டு, நகர வீதிகள் குளம் குட்டைகளாகத்தான் காட்சியளிக்கின்றன. பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களில் இதைவிட அதிகமாக மழை பெய்கிறதாம். அங்கு ஒரே நிமிஷத்தில் தண்ணீர், மழைத் தண்ணீர் எங்கே போகிறது என்று தெரியாமல் போய்விடுகிறது. அப்படியிருக்கிறது, அங்கு வடிகால் வசதி. ஆனால் இங்கு அப்படிப்பட்ட நிலையிருக்கிறதா, மழை பெய்தால் மழைத் தண்ணீரை உறிஞ்சி எடுக்கக்கூடிய அளவில் வடிகால்கள் இருக்கின்றனவா என்று பார்க்கவேண்டும். ஆக, நாம் கொடுக்கிற பணம் சரியாகச் செலவு செய்யப்பட வேண்டும், அதனால் மக்களுக்கு நன்மை ஏற்படவேண்டும். வட சென்னையில் தண்ணீர் சப்ளைக்காக சண்டைபோட்டு 36 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டு செகன்ட் மெயின் போட்டும், பம்ப்ஸ் வாங்க மறந்துவிட்டார்கள் என்று பேசாமல் இருக்கிறார்கள். 1962-ல் வோட்டு கேட்கப் போனால் வட சென்னைக்கு (பெல்) ஏன் தண்ணீர் வரவில்லையென்று கேட்பார்கள். அதற்கு நகராட்சியைக் காட்டுவதா அல்லது நம்மையே சொல்வதா? ஆக, பெரும் தொகைகளைக் கேட்கிறார்கள், நாம் கொடுக்கிறோம், பெரிய பொறுப்புகளை அவர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற உணர்ச்சியில்லாமல், சரிவர வேலைகள் செய்யாமலிருந்தால் இந்த ஆட்சியை தொடர்ந்து நடத்திக்கொண்டு போவதற்கு தேவையேயில்லை, நல்லவர்கள் வந்தால் நடத்தட்டும். ஆக, நாம் கொடுக்கக்கூடிய தொகைகளை அவர்கள் ஒழுங்காகப் பயன்படுத்துகிறார்களா என்று கண்காணிப்பது அவசியம் என்று கூறிக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

[25th March 1961

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: இந்த மான்யத்தின் பேரில் கொண்டுவரப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை நான் ஆதரிக்கிறேன். முக்கிய சில அம்சங்களை மட்டும் எடுத்துச் சொல்லிவிட்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். 182 லட்சம் ரூபாயில் ரோடுகளை புதுப்பிப்பதற்கும், புதிதாக ரோடுகள் போடுவதற்கும், இருக்கக்கூடியவற்றை பழுது பார்க்கவும் வேறு வசதிகள் செய்து கொடுக்கவும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதில் பஞ்சாயத்து யூனியன்களுக்கும், பஞ்சாயத்து போர்ட்களுக்கும் தொகை ஒதுக்கப்பட்டுள்ளது. அநேகமிடங்களில் சாலைகள் எல்லாம், முன்பு ஜில்லா போர்ட் காலத்தில் போடப்பட்டவை—அவைகள் அநேகமாக பாழடைந்துகொண்டு வருகிறது. அவைகள் நல்ல முறையில் வைக்கப்படவில்லை. இப்பொழுது அவைகளை நாம் பஞ்சாயத்து ஆட்சியின்கீழ் கொடுக்கப் போகிறோம். அவைகளை சீர்திருத்த வேண்டியதற்குள்ள பொருள் உதவியை நாம் டயத்தில் கொடுப்பதில்லை. ஆகவே, இந்த ரோடு வேலைகள் எல்லாம் துரிதமாக நடக்கவில்லை. ஆகவே, அந்த வேலைகளை எவ்வளவு துரிதமாக செய்ய முடியுமோ அவ்வளவு துரிதமாக செய்யவேண்டும். பஞ்சாயத்துக்களிடம் ஒப்படைக்கும்போது அவைகளை நன்கு அமைத்து கொடுக்கவேண்டும். ஒவ்வொரு ஜில்லா போர்டிலும் கலெக்டர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். ஒவ்வொரு மாவட்டத்திலும் லட்சக்கணக்கான ரூபாய் கன்ட்ராக்டர்களுக்கு கொடுக்கவேண்டிய பாக்கியிருக்கிறது. அவை, கொடுக்கப்படவில்லை. உதாரணமாக வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பிரதேசங்களுக்கு தொகை ஒதுக்கப்பட்டிருந்தும் சர்க்கார் அதை கொடுக்கவில்லை. தென் ஆற்காடு மாவட்டத்திற்கு 6 லட்சம் ஒதுக்கப்பட்டிருப்பது கண்டு அதை வரவேற்கிறேன். செங்கல்பட்டு மாவட்டத்தில் 2 லட்சம் வரையில் flood damages, வெள்ளத்தால் சேதம் அடைந்ததற்கு மெயின்டெனன்ஸ் கிரான்ட்டிலிருந்து எடுத்து பழுது பார்த்திருக்கிறார்கள். ஆகவே, பஞ்சாயத்து ஆட்சி வருவதற்கு முன் ஜில்லா போர்ட்களுக்கு கொடுக்கவேண்டிய தொகைகளை எவ்வளவு துரிதமாகக் கொடுக்க முடியுமோ அவ்வளவு துரிதமாகக் கொடுப்பதற்கு சர்க்கார் முன் வரவேண்டும்.

கிராமங்களில் எல்லாம் நன்றாக ரோடுகளைப் போட்டாக வேண்டும். இப்போதுள்ள முறைப்படி இதில் பஞ்சாயத்துகளுக்கும் பஞ்சாயத்து யூனியன்களுக்கும் பொறுப்பு இருக்கிறது. ஆகவே, அவைகளை எல்லாம் துரிதமாக நடத்துவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்தாக வேண்டும். சில இடங்களில் போடப்பட்ட ரோடுகள் எல்லாம் பாழடைந்து இருக்கின்றன. இதற்கு எல்லாம் மான்யங்கள் அதிகமான அளவில் கொடுக்கவேண்டும். லோக்கல் டெவலப்மெண்ட் வொர்க்ஸ்ஸின்கீழ் போடப்பட்ட ரோடுகள் எல்லாம் சீர்கேடாக இருக்கின்றன. இதையெல்லாம் சீர்செய்ய வேண்டும், இல்லையென்றால் இதில் செலவு செய்த பணம் எல்லாம் வீணாகிவிடும். இப்போது பஞ்சாயத்து யூனியன்களுக்கு அதிகத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகையானது இது வரையில் அமைக்கப்பட்ட பஞ்சாயத்துகளுக்கு மட்டும்தான்

25th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

கொடுக்கப்படும் என்று தெரிகிறது. இப்படியானால், 1961-வது அக்டோபரில் ஆரம்பிக்கப்போகும் பஞ்சாயத்துகளுக்கு எல்லாம் வரப்போகிற ஆண்டில்தான் கிராண்ட் கொடுக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது பஞ்சாயத்து யூனியன்கள் அமைப்பதற்கு முன்பாகவே பல இடங்களிலும் ரோடுகள் எல்லாம் சீர்கேடாக இருக்கின்றன. ஆகவே, இந்தப் பஞ்சாயத்துகளுக்கு எல்லாம் உடனடியாக வேண்டிய உதவி கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சென்னை கார்ப்பரேஷன் ரோடுகளைப் பொறுத்தவரையில் சில ரோடுகள் நன்றாக இருக்கின்றன. அவர்களுக்கு இப்போது கொடுக்கப்படும் மான்யம் போதாது. மக்கள் அதிகரித்துக்கொண்டே போகிறார்கள், தெருவீதிகள் எல்லாம் சீர்கேடாக இருக்கின்றன. மௌண்ட் ரோட்டை மட்டும் சீராக வைத்திருந்தால் பிரயோசனமில்லை. மௌண்ட் ரோட் முக்கியமான ரோடாக இருந்தபோதிலும், ஒவ்வொரு டிவிஷனிலும் போட வேண்டிய ரோடுகளை எல்லாம் துரிதமாக போடவேண்டும். அதற்கான நிதியும் கொடுத்து உதவவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சைதாப்பேட்டையில் மர்மலாங் பாலத்தை இப்போது நாஷனல் ஹைவேஸ்ஸில் இருப்பதை மத்திய சர்க்கார் ராஜ்ய சர்க்காருடன் ஆணை கொடுத்து விரிவுபடுத்தி கட்டப் போவதாக, அதற்காக கடிதப் போக்குவரத்து நடந்துகொண்டிருக்கிறது. இதற்காக 50 லட்சம் ரூபாயில் எஸ்டிமேட் போட்டிருக்கிறார்கள். இதில் அமைச்சர் அவர்கள் துரிதமாக வேலை நடப்பதற்கு கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதே போன்று ஃபஸ்ட் லைன் பீச்சில் (first line beach) இருக்கும் ரோடு, திருவொற்றியூர் ரோடு இவைகளுக்கும் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது மிகவும் அவசியமாக இருக்கிறது. ஆகவே, இதை உடனடியாக எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். வாட்டர் சப்ளை விஷயமாக, குடிதண்ணீர் வசதி செய்து கொடுப்பதற்கு மிகவும் காலதாமதம் ஆகிறது. முக்கியமாக ஒவ்வொரு கிராமங்களிலும், ஒவ்வொரு சேரிகளிலும், கிணறு வசதி இருக்கவேண்டும், குடிதண்ணீர் வசதி இருக்கவேண்டும். இவைகளுக்கான வேலைகள் எல்லாம் துரிதமாக நடப்பதில்லை. சில பிராந்தியங்களுக்கு மட்டும் சில வசதிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. கிணறுகளில் எல்லாம் தண்ணீர் இல்லாததின் காரணமாக பலவிதமான கஷ்டங்கள் ஏற்படுகிறது. சில இடங்களில் தண்ணீரை மக்கள் பயன்படுத்த முடியாமல் இருக்கிறது. ஆகவே, இவைகளையெல்லாம் கவனித்து குடிதண்ணீர் வசதி எல்லா இடங்களுக்கும் செய்து கொடுக்கவேண்டும். அதோடு குடிதண்ணீர் வசதி செய்து கொடுப்பதற்கு ஒதுக்கப்படும் மான்யத் தொகைக்கு வட்டி போடப்படுகிறது. இந்த வட்டியை வஜா செய்து கொடுக்க முடியுமா என்பதைப்பற்றி ஆலோசிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

சேரி ஒழிப்புத் திட்டத்திற்காக தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. வரவர சேரிகள் பெருகிக்கொண்டுதான் இருக்கிறது. இந்த திட்டத்தின்கீழ் வேலை ஆமை வேகத்தில்தான் போய்க்

கொண்டிருக்கிறது. சேரி ஒழிப்புத் திட்டங்களை எல்லாம் அமல் நடத்துவதற்கு காலதாமதமின்றி முழுமுரமாக வேலை நடக்க வேண்டும், அதற்கான நடவடிக்கைகள் எல்லாம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு புது சேரிகள் எல்லாம் வராமல் இருப்பதற்கு என்னென்ன திட்டங்கள் போட வேண்டுமோ அவைகளை எல்லாம் போட்டு, அவைகளை அமல் நடத்துவதற்கும் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தை களை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையின்மீது சொல்லவேண்டிய விஷயங்களை எல்லாம் அச்சடித்து கனம் அங்கத் தினர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்போது என்னென்ன வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. இன்னன்ன வேலைகளை அரசாங்கம் ஆதரித்துக்கொண்டிருக்கின்றது, எந்தெந்த நகர சபைகள், எந்தெந்த ஸ்தல ஸ்தாபனங்கள் என்னென்ன முயற்சிகள் எடுத்துக்கொண்டிருக்கின்றன என்பதைப்பற்றி எல்லாம் விரிவாக இந்த அறிக்கையில் காண்பித்திருக்கிறேன். திரு. மருதாச்சலம் அவர்கள் பேசும்போது, கோவையில் சுகாதார தொழிலாளர் களுடைய எண்ணிக்கை உயரவேண்டும், இப்போது கோவையில் 1,000 தொழிலாளர்கள் இருக்கிறார்கள், அவர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுக்கவேண்டும் என்றும் கூறினார்கள். சுகாதாரத் தொழிலாளர்களைப் பொறுத்தவரையில் அது இந்த இலாகாவின் பொறுப்பில் இல்லை. அது சுகாதார இலாகாவின்கீழ் இருக்கின்ற காரணத்தால் அவர்களை அதிகமாக நியமிப்பதுபற்றியோ அல்லது அவர்களது சம்பளத்தை உயர்த்துவதுபற்றியோ நான் ஒன்றும் சொல்ல முடியாத நிலையில் இருக்கிறேன். அதேசமயத்தில் இன்று அவர்களுக்கு எவ்வளவு வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமோ அந்த அளவுக்கு நாம் செய்து கொடுத்துக்கொண்டிருக்கிறோம். அவர்களுக்கு இப்போது 200 வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டிருக் கிறது. இந்த அளவுக்காவது கொடுக்க முடிந்தது என்றுதான் சந்தோஷமடைய வேண்டியிருக்கிறது. போதுமான அளவுக்கு நிதிநிலை இல்லாததின் காரணமாக பல வேலைகள் நிறைவேற்று வதில் அனேக பிரச்னைகள் எழுகின்றன. ஆகவே, அவர்கள் பின் தங்கிய நிலையில் இருந்தாலும், அவர்களுடைய வாழ்க்கைக்கு எந்த வகையில் வசதி செய்து கொடுக்க முடியுமோ அந்த அளவுக்கு பல நகரசபைகளும் செய்து கொடுக்க அரசாங்கம் உதவிக்கொண்டிருக் கிறது. இப்போது பல நகரசபைகள் மூலமாக அவர்களுக்கு உடை அளிக்கப்படுகிறது. தீபாவளி சமயத்திலோ அல்லது அவர் கள் தேர்ந்தெடுக்கின்ற காலத்திலோ உடைகள் கொடுப் பதோடு மட்டுமல்லாமல், இந்த வருடம் கீழ்த்தர சிப்பந்திகளுக்கு அவர்களுடைய சம்பளத்தில் ஐந்து ரூபாய் உயர்வு அளித்து, அவர்களுடைய பிரச்னையும் ஓரளவுக்கு கவனிக்கப்பட்டு வருகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன். சிறுவாணி தண்ணீர் திட்டத்தைப்

25th March 1961] [Srimathi Lourdhammal Simon]

பற்றி சொன்னார்கள். அந்தத் திட்டத்திற்காக இந்தப் பட்ஜெட்டில் 2 லட்சத்து 83 ஆயிரம் ரூபாய்க்கு எஸ்டிமேட் போடப்பட்டு அதற்காக கடன் கொடுக்கவும் தொகை ஒதுக்கியு மிருக்கிறது. ஆனால் இதில் பல பிரச்னைகள் எழுகின்றன. ஆகவே, இந்த அணைக்கட்டுத் திட்டத்தில் சாதகமான சூழ்நிலை ஏற்படு வதற்கு காலதாமதம் ஆகிறது. இப்போது 72¼ லட்சம் ரூபாய் செலவில் குடிதண்ணீர் திட்டம் போடப்பட்டு, இப்போது அதில் பாதிக்கு மேல் வேலையும் முடிந்திருக்கிறது.

ஸ்ரீமதி பொன்னம்மாள் அவர்கள் பேசும்போது, சாலைகள் அமைப்பதில் காலதாமதம் ஏற்படுவதாகவும், வீடுகள் கட்டிக் கொடுக்கவேண்டிய பிரச்னைகளைப்பற்றியும் எடுத்துச் சொன் னார்கள். அவர்கள் இந்த இலாகா சம்பந்தப்பட்ட விஷயங்க ளோடு, வேறு இலாகாக்களைப்பற்றிய பல பிரச்னைகளையும் எடுத்துச் சொன்னார்கள். சேரிகளை அபிவிருத்தி செய்கின்ற விஷயத்தைப் பற்றியும் எடுத்துச் சொன்னார்கள். சேரி அபிவிருத்தி விஷயத்தில் பலவிதமான தொல்லைகள் ஏற்படுகின்றன என்பதை எல்லோரும் அறிந்திருக்கிறோம். இதற்கான நடவடிக்கைகள் எடுத்துக்கொண் டிருக்கும் காலத்திலும் ஆங்காங்கு பல குடிசைகள் தோன்றி விடுகின்றன. இதை சமாளிப்பது பெரிய கஷ்டமாக இருக்கிறது. ஆகவே, இதில் பொதுமக்களும் அதிகமான அக்கறை எடுத்துக் கொண்டு உதவி செய்யவேண்டும். பொதுமக்களும், அரசாங்கமும் ஒத்துழைத்தால்தான் இந்தத் திட்டம் வெற்றிகரமாக நடந்தேற முடியும். ஆகவே, இதற்கு பொதுமக்கள் அனைவரும் தங்கள் ஒத்துழைப்பைக் கொடுக்கவேண்டும் என்று இச்சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

திரு. சங்கரன் அவர்கள் பல விஷயங்களைப்பற்றி குறிப்பிட் டார்கள். ஏதோ அங்குள்ள பிரதிநிதிகள் இங்கு வந்து கத்துவ தில்லை என்று அந்த இடத்திலுள்ள மக்கள் நினைத்துக்கொள் வார்கள் என்று சொன்னார்கள். . . (குறுக்கிடு) கத்துவது என்று நான் சொல்லவில்லை, திரு. சங்கரன் அவர்களே சொன் னார்கள், நமது பிரதிநிதிகள் இங்கு வந்து கத்துவதில்லை என்று அங்குள்ள மக்கள் நினைத்துக்கொள்வார்கள் என்று சொன்னார்கள். நான் சொல்வது, இங்கு கத்துவதால் எதுவும் நடக்கும் என்று தோன்றவில்லை. ஆனால் ஒரு விஷயத்தைமட்டும் என்னால் இங்கு சொல்ல முடியும். இங்கு சொல்லப்பட்ட பாலம் சம்பந்தப்பட்ட விஷயத்தை, அங்குள்ள பிரதிநிதிகள் யாரும் இந்த வருடம் என் னிடம் பேசினதே கிடையாது. நேற்றுத்தான் இதைப்பற்றி சட்ட சபையில் பேசினார்கள். இது ஒரு முக்கியமான பிரச்னை என் பதை அரசாங்கம் நன்கு உணர்ந்திருக்கிறது. இதில் என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமோ அவைகளை எடுத்துக்கொள்ள வரும் ஆண்டுகளில் என்னால் இயன்றவரை முயற்சி எடுத்துக்கொள் வேன் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள் பேசும்போது நகரங் களிலும் கிராமங்களிலும் தண்ணீர் கொடுக்கும் முறையில் அநேக வேறுபாடுகள் இருக்கின்றன--நகரங்களுக்கு அதிக வசதி இருக்

கின்றன—என்று கூறினார்கள். இது ஒருவரும் ஏற்றுக்கொள்ள முடியாத கருத்து. சில மேஜர் பஞ்சாயத்துக்களை நகர சபையாக மாற்றலாம் என்று தெரிவித்திருந்தாலும் பஞ்சாயத்துக்களாக இயங்கினால் அதிக சலுகை கிடைக்கலாம் என்று அவர்கள் பஞ்சாயத்தாகவே இருக்கவேண்டும் என்று அவர்கள் கூறு கிறார்கள். நகரசபையாக, ஆனால் பஞ்சாயத்துக்களுக்குக் கிடைக் கக்கூடிய வசதிகள் கிடைக்காது, குடி-தண்ணீர் முதலியவற்றிற்கு பஞ்சாயத்துக்களுக்கு அதிக உதவி அளிக்கப்படுகிறது என்று நகர சபையாக ஆக வேண்டாமென்று சொல்லி தடங்கல் செய்கிறார்கள். அதேநேரத்தில் விசேஷமாக இப்போதுள்ள பஞ்சாயத்துச் சட்டப்படி கிராமங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து கிராம ஆக்க வேலைகளிலும், தேசிய விஸ்தரிப்புத் திட்ட வேலைகளிலும் நாம் வெற்றிகண்டிருக்கும் நிலையில் கிராமங்கள் கவனிக்கப்பட வில்லை, கிராமங்களுக்கு குடி தண்ணீர் வசதி கொடுக்கப்படவில்லை என்று கூறுவது வருந்தத்தக்கது.

நகரங்களில் ஜன நெருக்கம் அதிகமாக இருக்கிறது. அங்கே தண்ணீர் கிடைப்பது அரிதாக இருக்கிறது. பக்கத்தில் குளங்கள், ஆறுகள், ஏரிகள் இல்லை என்றால் தண்ணீர் கிடைப்பதற்கு சாத்தியமில்லை. இவ்வாறு இருக்கக்கூடிய நெருக்கடிகளை கவனித்து அநேக லட்சம் பேர்களுக்கு தண்ணீர் கொடுக்க நகர சபைக்கு அரசாங்கம் உதவி அளிக்கவேண்டுமென்று அளிப்பதனால் தான் இவ்வாறு நல்ல ஆக்க வேலைகளில் ஈடுபட்டு நகரங்களிலுள்ள மக்களுக்கு தண்ணீர் வினியோகம் நடைபெற்று வருகிறது.

மேட்டூரில் ரோடு, குடிதண்ணீர், சுகாதார வசதிகள் இல்லை என்றும் சட்டசபை அங்கத்தினர் அங்கு மேட்டூர் டவுன்ஷிப்பில் அங்கத்தினராக இல்லை என்றும் கனம் அங்கத்தினர் திரு. அர்த்தநா ரீஸ்வர கௌண்டர் அவர்கள் பேசினார்கள். வேறு டவுன்ஷிப்பு களில் சட்டசபை அங்கத்தினர்கள் இருக்கிறார்களென்றால் இந்த ட்வுன்ஷிப் இப்போது ஏற்பட்டதல்ல அதற்குப் பின்னால் வந்த சபைகளில்தான் சட்டசபை அங்கத்தினர்கள் அங்கம் வகிக்கிறார் கள். இதையும் கவனித்து அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்வேன் என்று சொல்லிக்கொள்கிறேன்.

கனம் அங்கத்தினர் பழனிசாமி கவுண்டர் அவர்கள் வெள்ளை அறிக்கையைப்பற்றி பேசினார்கள். அது பரிசீலனை செய்யப்பட்டு நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அதற்கு அடுத்தபடி சென்னை கார்ப்பரேஷன் வெள்ளை அறிக்கை பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. இன்னும் அதேபோல நகரசபை வெள்ளை அறிக்கையும் பரிசீலனை செய்யப்பட்டு துரிதமாக நிறைவேற்றப்படும். கமிஷனரின் உத்தியோக உயர்வைப்பற்றிப் பேசினார்கள். அது வரவேற்கத் தக்கது. அவர்களுக்குத் தெரியும் இரண்டு வருஷங் களுக்கு முன்னால் கமிஷனருக்கு உத்தியோக உயர்வு கொடுக்கப்பட் டிருக்கிறது. ஒரு சிலருக்கு வாய்ப்பு கிடைத்திருக்கிறது. மற்றவர் களுக்கு அந்த வாய்ப்பு கிடைக்க அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

25th March 1961] [Srimathi Lourdhammal Simon]

எல்லா நகர சாலைகளையும் நகராண்மைக் கழகமே பரிபாலிக்க வேண்டியிருக்கிறது என்று நகரசபை பற்றிப் பேசினார்கள். இதற்காக 15 லட்சம் ரூபாய் கடனாகவும், 15 லட்சம் ரூபாய் மான்ய மாகவும் கொடுக்கப்பட்டிருக்கிறது. சர்க்காருடைய கொள்கை யாக இதைக் கொடுக்கவில்லை. இப்போது அநேக ரோடுகள் இருக்கிற நிலைமையைக் கருதி, இருக்கக்கூடிய மோசமான நிலைமை யைக் கருதி அதற்கு வேண்டிய உதவி செய்யவேண்டுமென்று இந்த விசேஷ சலுகையை இப்போது அரசாங்கம் கொடுத்துக்கொண்டு வருகிறது. ஆக, இதே சலுகைகள் எப்போதுமே கொடுக்க வேண்டும் என்பது அல்ல, சாலைகளைப் பராமரிப்பதில் நகரசபை களுக்கு. அநேக அங்கத்தினர்கள் கூறினார்கள், மான்ய உதவி, கடன் உதவி இவைகளெல்லாம் கொடுக்கவேண்டுமென்று. நாளுக்கு நாள் கடன் பளு அதிகமாகிவிட்டால் நிலைமை என்ன ஆகும் என்று பார்க்கவேண்டியிருக்கிறது. எல்லா காரியங் களுக்கும், அங்கே செய்யவேண்டிய அத்தனை வேலைகளுக்கும் அரசாங்க உதவி வேண்டுமென்று எதிர்பார்த்தால் பளு அதிகமாக ஆகும்—கடன் அதிகமாக ஆகும். அதை கவனித்துத்தான், எவ்வாறு திருப்பிக் கொடுக்க முடியும் என்று பார்த்து, எவ்வளவு தேவை என்று பார்த்து அதன்படி இப்போது கடன் உதவியையும் மான்ய உதவியையும் அரசாங்கம் அளித்து வருகிறது.

ஸ்தல ஸ்தாபன நிர்வாகத்தைப் பல பிரிவுகளாக நடத்துவதால் சில கஷ்டங்கள் ஏற்படுகின்றன என்று கனம் அங்கத்தினர்கள் அன்பழகன் அவர்களும் அனந்தநாயகி அவர்களும் பேசினார்கள். சிரமங்கள் இருந்தாலும் பாதிக்கப்படும் அளவில் நிலைமை இல்லை, அவ்வளவு அதிக சிரமம் இல்லை என்று கூறவேண்டியிருக்கிறது. ஏதாவது இருந்தால் ஒன்றன்பின் ஒன்றாக இருந்து நடத்துவதால் சௌகரியமாக இருக்கும் என்று கூறிக்கொள்கிறேன்.

வடிகால் திட்டங்கள் எங்கெங்கு இருக்கின்றன என்ற கேள்வியும் கேட்கப்பட்டது. கும்பகோணம், ஊட்டி, தூத்துக்குடி, சிதம்பரம், திருச்சிராப்பள்ளி, மதுரை, சென்னை கார்ப்பரேஷன், நாகப்பட்டினம், விருதுநகர், ஸ்ரீரங்கம், கோயம்புத்தூர், சாத்தூர் ஆகிய 12 இடங்களில் வடிகால் திட்டங்கள் இருக்கின்றன.

ராசிபுரம் குடிதண்ணீர் திட்டத்தைப்பற்றியும் அதிகமாக எடுத்துப் பேசினார்கள். இப்போது அதையும் பரிசீலனை செய்து என்ன உதவி செய்யவேண்டுமென்று விசேஷமாக கவனித்து உதவிகளைச் செய்ய முயற்சி எடுத்துக்கொள்வேன் என்று கூறிக்கொள்கிறேன்.

கனம் எதிர்கட்சித் தலைவர் அவர்கள் சில வேலைகளைப்பற்றிக் குறிப்பிட்டு அதற்குள்ள நிதி நிலையைப் பற்றிக் கூறினார்கள். அதற்கான விவரங்கள் இப்போது என்னிடத்தில் இல்லை. பின்னர் அதை சபைக்கு அறிவித்துக்கொள்கிறேன் என்று கூறுகிறேன்.

மற்றும் வேறு அங்கத்தினர்களும் இங்கு கூறிய நல்ல ஆலோசனைகளுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். அதே சமயத்தில் குடிதண்ணீர் பிரச்னைபற்றிப் பேசும்போது, ரோடு

வசதிபற்றிப் பேசும்போது, இப்போது குடிதண்ணீர் பிரச்னை நம் நாட்டில் எங்கு பார்த்தாலும் பெரிய பிரச்னையாக இருக்கிறது. மத்திய அரசாங்கமும் நம் அரசாங்கமும் கவனித்து வேலை செய்து நல்ல ஏற்பாடுகளைச் செய்ய ஆலோசனைக் குழு எல்லாம் ஏற்படுத்தி நல்ல முறையில் தீவிரமாக வேலை செய்வதைப் பார்க்கிறோம். இந்த நிலையில் இந்தப் பிரச்னை வெகு சீக்கிரத்தில் நமது நாட்டைவிட்டு நீங்கி எல்லோருக்கும் பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் கிராமங்களிலும், நகரங்களிலும் கிடைக்கும் வாய்ப்பு ஏற்படும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். இங்கே பேசிய அங்கத்தினர்கள் அத்தனை பேரும் அதிக உதவி, அதிக மான்ய உதவி, கடன் உதவி வேண்டும், இப்போது கொடுப்பது போதாது என்று பேசினார்கள். நமது நிதிநிலை காரணத்தினால்தான் அநேக வேலைகள் தடங்கல் ஆகிறது என்று கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிவித்துக்கொண்டு இந்த வெட்டுப் பிரேரணையை பின்வலித்து, இந்த மான்யக் கோரிக்கையை முழுதும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri N. Marudachalam, pressing or withdrawing his cut motion?

SRI N. MARUDACHALAM : I press my cut motion, Sir.

DEPUTY SPEAKER : The question is—

"That the allotment of Rs. 2,40,25,100 under Demand XXIX—Civil Works—Grants-in-Aid be reduced by Rs. 100."

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : Now I put the Demand to the vote of the House. The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,40,25,100 under Demand XXIX—Civil Works—Grants-in-Aid."

The Demand was put and carried and the Grant was made.

### IV.—GENERAL DISCUSSION ON DEMANDS FOR GRANTS FOR EXCESS EXPENDITURE FOR 1957–58.

DEPUTY SPEAKER : The next item in the Agenda is the general discussion and voting on Demands for Grants for Excess Expenditure in 1957–58. If hon. Members want to speak on this, they may speak now.

* SRI S. M. ANNAMALAI : சட்டமன்றத் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் 1957-58-ம் ஆண்டில் அதிகமாகச் செலவழித்ததையொட்டி இங்கே மான்யக் கோரிக்கைகள் கொண்டு வந்திருக்கிறார்கள். அதைப் பார்க்கும்போது மூன்று ஆண்டுகள் கழித்து கொண்டுவருவதைப் பார்த்தால், பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டி சிபாரிசு செய்ததன் பேரில் தான் கொண்டுவருகிறேன் என்று அறிக்கையிலே சொல்லப் பட்டிருக்கிறது. பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியானது 1956-57-லேயே சொல்லியிருக்கிறது—